# பதிப்புரை

எத்தனையோ பேர் பாரதி வாழ்க்கையும் அவர் தம் பாடல்களையும் எடுத்தாண்டிருக்கிறார்கள். இருப்பினும் பாரதி பாடல்களைக் கொண்டே அவர்தம் வாழ்க்கையைச் சுவை குன்றாமல் ஆசிரியர் எழுதி யுள்ளார். ''புதியன சிந்தித்தல்'' என்ற பாரதியின் வாக்கிற்கிணங்க, ஆங்காங்கே புதிய பாடல்களையும், புதிய செய்திகளையும் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். இந்நூல் பொதுவாக மாணவர் உலகத்துக்குச் சிறந்த நூலாக அமையும் வண்ணம் இருப்பதை காணலாம்.

ஒவ்வொரு அத்தியாயத்திலும் பாரதியின் பாடல் சேர்த்திருப்பது சிறப்பாக உள்ளது. இந்த அழகிய நூலை வெளியிடும் வாய்ப்பு தந்த ஆசிரிய ருக்கு எங்கள் மனமார்ந்த நன்றி!

மற்றும், இந்நூல் வெளிவர, உதவிபுரிந்த அனை வருக்கும் நன்றி!

இங்ஙனம்

**சரசு பதிப்பகத்தார்.**

## பொருளடக்கம்



# பாரதி - வாழ்வும் வாக்கும்

## 1. ஜீவநதி

"இன்னறு நீர் கங்கை யாறெங்கள் யாறே
இங்கிதன் மாண்பிற் கெதிரெது வேறே"

பாரதி — அவன் ஒரு ஜீவ நதி. வற்றாத கங்கை ஆறு. ஆழம் காலுக்கு எட்டி விடுமோ என்று தோன்றும். ஆனால் கடலைப்போல ஆழ்ந்து கொண்டிருக்கும். அதன் விளைவுக்குள் சிக்காத எழிலில்லை. அதன் வரவுக்குள் சிக்காத பொருள் இல்லை. புனிதம் அதன் தனிச் சிறப்பு.

பாரதி — அவன் இமயமலை. அதன் பனிக்கல் உருகும். அதன் கருவில் முகிழ்த்த நதிகள் பிறந்த வீட்டுப் பெருமையை நிலை நாட்டிக் கொண்டிருக்கும். அது மேகச் சுமை தாங்கி.

இமயமலை, அது ஒரு சமய மலை. அங்கே சிவன் நடனமாடுவான். சக்தி ஆனந்தக் கூத்தாடுவாள்.

விண் மண்ணை நெருங்கும். மண்ணிலிருந்து விண்ணுக்குக் கைநீட்டலாம். விண்ணின் கருமை கண்ணை வரவாக்கும்.

பாரதி — அவன் ஒரு ஆழ்கடல். அலைகள் கீதம் பாடும். மண்ணை நக்கி நக்கி முத்தமிடும். முத்தும், பவளமும் விளைக்கும். பரந்து விரிந்து எல்லை உண்டோ இல்லையோ என்று வியக்கத் தொடுவானின் அடி வருடும், உதிக்கும் கதிரின் இருளைக் கழுவி, மஞ்சள் பூசி வெளியே தள்ளும்.

பாரதி — அவன் மூச்சுக் காற்று. குளிரும், சுடும். உயிர் நிலையாகும், இயக்கம், இயங்கும், இயம்பும் இசைக்கும்.

என்னோடு வாருங்கள். ஜீவநதியில் புனிதம் பெறுவோம். மலையின் நிமிர்வில் விண்ணை அறிவோம். கடலில் மூழ்கி முத்துக் குளிப்போம். காற்றின் வீச்சில் கவிதை பாடுவோம்.

## 2. கவிதை யோகம்

**"உண்மையான கவிதை அருமையான திரவியம். அதனால் உலகம் க்ஷேமத்தை அடைகிறது. எந்த நாட்டிலே புதிய மகாகவி தோன்றுகிறானோ, அந்த நாடு மகா பாக்கியமுடையது. தமிழ் நாட்டிலே கவிதையின் புகழ் ஏறுக"**

**—மகாகவி**

தமிழ் நாடு பாக்கியம் உடையது. எத்தனையோ மொழிகள் தோன்றிடும் முன்னம் தமிழ்மொழி இலக்கிய





சிறப்புப் பெற்றிருந்தது. எத்தனையோ பெருங் கவிஞர்கள் தோன்றி இம்மொழியை வளப்படுத்தினார்கள். அந்த வரிசையிலே புதிய மறுமலர்ச்சிக்கு வித்திட்டு புதுயுக மாளிகையின் ஆசார வாசலைத் திறந்து வைத்தான் பாரதி.

தன் தகுதியை அளவுக்கு மீறி மதிப்பவர்கள் உண்டு. தன் தகுதியை சரிவரப் புரிந்து கொள்ளாதவர்கள் உண்டு. ஆனால் தன் திறமையைச் சரிவரப் புரிந்து கொண்ட மாமேதை பாரதி.

'நமக்குத் தொழில் கவிதை' என்று பாடினான். ஆனால் கவிதை அவனைத் தொழில் செய்ய ஆட்கொண்டது. காலம் அவன் வேகத்துக்கு ஈடு கொடுக்க முடியவில்லை, தள்ளாடியது. பாரதி கவியரங்குகளுக்காகப் பாடவில்லை. இந்நாளில் கவியரங்குகளில் அவனைப் பாடுகிறார்கள். பாரதி பாராட்டுகளுக்காக பாடவில்லை. ஆனால் அவன் பாடல்கள் அவனுக்கு புகழ் பெற்றுத் தந்தன. பாரதி கணங்களை யுகங்களாக மாற்றினான். தாளைக் கறுப்பாக்கி அதை ஒரு சரித்திரமாக ஆக்கினான். அவனுள் பொங்கி வந்த கவிதை ஊற்று அவன் நாவின் வழி பாய்ந்தது. அவன் கை நரம்புகளின் துடிப்பு எழுதுகோலை நடனமாடச் செய்தது.

தேசத்திலே புகைந்து கொண்டிருந்த நெருப்பை ஊதி ஊதிப் பற்ற வைத்தான். அவன் ஊதிய காற்று உள்ளங்களை இயக்கியது. கவிதையாக வாழ்ந்தான். அவன் வாழ்க்கை கவிதையாகியது.

அவன் வாழ்வும் வாக்கும் பின்னிப் பிணைந்தன. அவன் வாழ்வை வாக்கு நடத்தியது. அவன் வாக்கு வாழ்வாக மாறியது.

புதிய மகாகவி தோன்றினால், அந்த நாடு பாக்ய முடைத்து என்றான் பாரதி. அந்தப் புதிய மகாகவி யாக அவனே அமைந்தான். எனவே அவன் தோன் றிய தமிழ்நாடு — தவறு, தவறு — இந்திய நாடு பாக்கியமுடையது.

காலைச் சூரியன், வீசும் தென்றல், விரிந்த வானம், அக்கினிக் குஞ்சு, இன்னறு நீர்க்கங்கை இவையெல்லாம் அவன் எழுதுகோலுக்கு மை கொடுத்தன.

“கள்ளையும் தீயையும் சேர்த்து — நல்ல
காற்றையும் வான வெளியையும் சேர்த்து
தெள்ளு தமிழ்புல வோர்கள் — பல
தீஞ்சுவைக் காவியம் செய்து கொடுத்தார்”

என்று பாடினான் அவன். மற்றவர்கள் பாடிக் கொடுத்ததாகச் சொன்னதை அவனே செய்தான். அழகை மாந்தி வெறி படைத்த மனம் அமுதைத் தந்தது. அவனே சொல்கிறான்—

“நிலாவையும் வானத்து மீனையும் காற்றையும்.
நேர்ப்பட வைத்தாங்கே
குலாவும்அமுதக் குழம்பைக் குடித்தொரு
கோல வெறிபடைத்தோம்”



அறுசுவைகளைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கின்றோம். ஈரச் சுவையைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கின்றீர் களா? பாரதி சொல்கிறான், தாரகை மணித்திரளின் அழகில் நனையுங்கள். அங்கே ஈரச்சுவை ஊறிவிடும்.

“தாரகை என்ற மணித்திரள் யாவையும்.
சார்ந்திடப் போமனமே
ஈரச் சுவையதில் ஊறிவரும் அதில்
இன்புறுவாய் மனமே”

கண்ட காட்சியை உண்டு விழுங்கிய மனம் பின் அதையே சமைக்கிறது. தானே விழுங்கிச் சமயம் வரும்போது சாப்பிடத் தருகிறது. அந்த மனத்திற்கு ஈடேது இணையேது?

“சீரவிருஞ்சுடர் மீனொடு வானத்துத்
திங்களையும் சமைத்தே
ஓரழகாக விழுங்கிடும் உள்ளத்தை
ஒப்பதோர் செல்வமுண்டோ”

அந்த அழகிலே திமிறித் திரியும் மனம் குண்டு சட்டி யில் குதிரை ஓட்டினால் என்ன செய்வது? எனவே பாரதி சொல்கிறான்.

“முன்றிலில் ஓடுமோர் வண்டியைப் போலன்று
மூன்றுலகுஞ் சூழ்ந்தே
நன்று திரியும்வி மானத்தைப் போலொரு
நல்ல மனம் படைத்தோம்!

அப்படிப்பட்ட மனம் படைத்த காரணத்தால்தான் பாரதி உலகத்து நிகழ்ச்சிகளை ஊடுருவிப் பார்க்க

முடிந்தது. பெல்ஜியமும், பிஜித்தீவும், ருஷ்யாவும் அவன் கவிதையில் தம்மை இனங்காட்டிக்கொள்ள முடிந்தது. வெம்மையும், தண்மையும், உயிர்ப்பும் அதைப் போல யார் தரமுடியும்.

''தென்னையின் கீற்றுச் சலசல வென்றிடச்
செய்து வரும் காற்றே!
உன்னைக் குதிரை கொண்டோடித் திரியுமோர்
உள்ளம் படைத்துவிட்டோம்''

ஆம், காற்றுப்புரவி, ககன விரிவு, கவிதை வேட்கை, மண்ணின் அழகு, மாந்தர் வாழ்வு, சக்திக் கூத்து; இன்னும் இன்னும் எத்தனை எத்தனையோ அவன் வாழ்வில் எப்படிஎப்படிப் பின்னிப்பிணைந்தன? அவன் வாழ்வு எப்படி அமைந்தது? அதைத்தானே பார்க்கப் போகிறோம்.

## 3. கைக்கிளை இலக்கியம்

''தேவர் மன்னன் மிடிமையைப் பாடல்போல்
தீய கைக்கிளை யானெவன் பாடுதல்''
—சுயசரிதை

பாரதியின் பெருமையை நன்ருக உணர்ந்து கொள்ள வேண்டுமென்ருல் அவன் எந்தச் சூழ்நிலை யில் தோன்றினுன் என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.



அன்று பாரத நாடு அடிமைப் பட்டுக் கிடந்தது. வெள்ளையன் நம்மை ஆண்டான். அன்னியர் ஆட்சியை எதிர்த்துப் பல செயல் வீரர்கள் போரிட்டுக் கொண்டிருந்தார்கள். 1857-ம் ஆண்டு நடந்த சிப்பாய்க் கலகம் வெள்ளையனை ஒரு கலக்குக் கலக்கியது. எனவே ஆங்கில அரசே நேரடியாக நிர்வாகத்தை ஏற்றுக்கொண்டது. அடக்கு முறை அத்து மீறியது. ஆங்கில அரசுக்கு அடிவருடிய சில குறுநில மன்னர் கள் சுகபோகங்களில் மிதந்தார்கள். மக்களைச் சுரண்டினுர்கள். இது அரசியல் நிலை.

தமிழ்நாட்டில் இலக்கியம் எவ்வாறு இருந்தது என்று பார்க்கலாம்.

''தீதில் ஆங்கிலேயர் செங்கோல் என்ஞான்றும் வாழ்கவே'' என்று ஓரளவுக்குச் சுதந்திரமாக இயங்கிய புலவர் ஒருவர் தனது நூலின் முன்னுரையில் எழுதினுர் என்ருல் இலக்கியமும் எவ்வாறு அடிமைப் பட்டுக் கிடந்தது என்பது புரியும்.

குறுநில மன்னர்கள் ஆங்கில அதிகாரிகளை மகிழ்விப்பதற்காகப் பல அநாகரீகமான வழி முறைகளை யெல்லாம் கையாண்டார்கள். மதுவும், மாதுவும் அவர்களின் போகப் பொருட்கள். அந்தப் போகத்தை அனுபவிக்க அவர்களுக்குக் கைகொடுத்தது தமிழ்க் கவிதை.

சிருங்கார லீலைகளில் சிக்கிக் கிடந்த அவர்களுக் குச் சிங்காரக் கவிதை உணர்ச்சி ஊட்டியது. வயிற்றுச்

சோற்றுக்கு வள்ளல்களை நாடிக் கிடந்த அந்தக் காலத்து அரை வயிற்றுப் புலவர்கள் தன் கும்பி நிறைவதற்காகப் பொய்யை மெய்யாகக் காட்டினார்கள். அழும் குழந்தைகூடப் பயந்துபோய் வாயைப் பொத்திக் கொள்கிற அளவுக்குக் கொடூரம் கொண்ட கோமானை இந்திரனென்றும் சந்திரனென்றும் மன்மதனை விஞ்சியவன் என்றும் வர்ணிக்க வேண்டிய நிர்ப்பந்தம் அவர்களுக்கு இருந்தது. வீதியிலே அரசன் பவனி வந்தால் அவனைக் கண்டு எழுவகை மாதர்களும் மோகித்து, இவனோடு கூடிக் குலவும் நாள் வராதா என்று ஏங்குவதாகப் பாடினால் அரசனுக்கு இன்பம் ஏறும். புலவர் தொப்பை நிரம்பும்.

தமிழ் அகவாழ்வில் 'கைக்கிளை' என்று ஒன்று உண்டு. அதாவது, ஒரு தலைக் காமம். காதல் ஒருவரிடை மட்டும் முகிழ்க்கின்ற நிலையை அவ்வாறு குறிப்பிடுவார்கள். மற்றவருக்கு அது தெரிந்துமிருக்கலாம், தெரியாமலும் இருக்கலாம். இந்தக் 'கைக்கிளை'யை இலக்கியமாக மாற்றி விட்டார்கள் புலவர்கள். அரசன் பவனி வரும்போது மாதர்கள் ஒருதலையாக ஏங்குவதாகக் காட்டுவது இந்த வகையைச் சார்ந்தது. அரசனின் ரூபலாவண்யங்களைப் புகழ்ந்து மாதர்களின் ஏக்கத்தைச் சொல்லிப் புலவர்கள் பாடி அரசனுக்குக் கிளுகிளுப்பை ஊட்டுவார்கள்.

குதிரை மேலேகூட ஒழுங்காக ஏறத் தெரியாத அரசனைப் பார்த்து "தங்கள் குதிரையின் காலடி ஓசை கேட்ட உடனேயே தங்கள் பகைவர்கள் மருண்டு ஓடுகிறார்கள். அன்று தாங்கள் பவனி வரும்



போது பார்த்த ஒரு மங்கை இவரோடு இணைய மாட்டோமோ என்று ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கிறாள். அவள் கைவளையல்கள் கழன்று விழுகின்றன. பாலன்னம் சிறிதும் அருந்துவதில்லை. கரையை விட்டு வெகு தூரம் நடுக்கடலில் செல்லும் கப்பலில் உள்ள காகத்தைப்போல் தத்தளித்துக் கொண்டிருக்கிறாள்" என்று பாடினால் அரசனுடைய உணர்ச்சி கொந்தளித்துக் கொண்டுவரும். புலவருக்கு விருந்து கிடைக்கும். இது ஒருவகை.

இன்னொரு வகை. உணர்ச்சிகளுக்கோ, பொருளுக்கோ அதிக முக்கியத்துவம் கொடுக்காமல் வார்த்தை ஜாலங்களிலும் சிலேடை, யமகம், திரிபு, மடக்கு, வண்ணம், நடுவெழுத்தலங்காரம், மாலை மாற்று, திரிபங்கி என்பன போன்ற பல யாப்புப் பின்னல்களிலும் சிக்குண்டு அதிலே பொழுதைக்கழித்தார்கள். கிச்சுக்கிச்சுக் மூட்டுவதுபோல நகைச்சுவையாகப் பாடத்தொடங்கினார்கள். அவர்களுடைய குறிக்கோளெல்லாம் அரசனை மகிழ்விக்க வேண்டும்! அவ்வளவுதான்.

தத்துவமாகப் பாடல் எழுதினால்தான் மதிப்பு என்ற நிலையும் ஒரு சாராரிடம் இருந்தது.

"வெங்காயம் சுக்கானால் வெந்தயத்தால் ஆவதென்ன?" என்றால் ஆகா, ஓகோ என்பார்கள்.

எட்டையபுரம் சமஸ்தானமும் இதற்கு விதிவிலக்கல்ல.

பல்லுடைக்கும்சொல்லெடுத்துப் பாடியபாவாணர்கள் வாழ்ந்த காலத்திலே, சிருங்காரக் கவிதையையே சிந்தனை செய்து, சீழ்பிடித்த புலவர்கள் வாழ்ந்த நாளிலே, பாரதி தோன்றினான். இந்த மண்ணிலே, தமிழ்ப் பண்ணிலே மறுமலர்ச்சி வித்தை ஊன்றினான்.

## 4. பாரதி தோன்றினான்

ஆண்டோர் பத்தினில் ஆடியும் ஓடியும்
ஆறுகுட்டையின் நீச்சினும் பேச்சினும்
ஈண்டு பன்மரத் தேறியிறங்கியும்
என்னோடொத்த சிறியர் இருப்பரால்;
வேண்டு தந்தை விதிப்பினுக்கு அஞ்சியான்
வீதி ஆட்டங்கள் ஏதினும் கூடிலேன்

—சுய சரிதை

தென்றல் பிறந்த இடம் பொதிகை மலை. செந்தமிழ் பிறந்ததுவும் அங்கேதான். பொதிகை மலையின் மரங்கள் சலசலத்த ஓசையிலே, அருவிகளின் ஆனந்தக் கூத்தாட்டத்திலே, பசுமைக் கதிர்களின் உரசல் நாதத்திலே ஒலியெடுத்துக் கடைந்து தமிழை ஆக்கினார் அகத்தியர். அந்தத் தமிழ் பொருநை நதியில் மிதந்து வந்தது.

பொருநை நதியோடு வேறு இரு நதிகளும் இணைந்து சங்கமித்துப் பாயும் சீவலப்பேரி என்ற சிற்றூர்தான் பாரதியாரின் பாட்டனார் வாழ்ந்த ஊர்,



பாரதியின்தாத்தா கடுவாய்சுப்பையர் அவ்வூரில்சீரும் சிறப்புமாக வாழ்ந்தார். அந்தக் கடுவாய் சுப்பையரின் மகன் சின்னச்சாமி ஐயர். அவர் சிறு வயது முதலே கணிதத்திலும் கவிதையிலும் ஈடுபாடு கொண்டிருந்தார். சீவலப்பேரியை விட்டு எட்டையாபுரம் சமஸ்தானத்தில் வித்துவானாகப் பதவியேற்றார். பஞ்சாலை ஒன்றை நிறுவினார். சின்னசாமி ஐயருக்கும் இலக்குமியம்மாளுக்கும் திருமகனாக 1882 டிசம்பர் மாதம் 11–ல் பாரதியார் பிறந்தார். ஐந்து வயதில் தாயை இழந்தார். சிற்றன்னையின் பராமரிப்பில் வளர்ந்துவந்தார்.

பாரதியார் வீட்டுப் பக்கத்திலேயே கோயில். சிறு பையன்கள் கோயில் பிரகாரத்திலே ஓடி விளையாடுவார்கள். பிற்காலத்தில்,

“ஓடி விளையாடு பாப்பா—நீ
ஓய்ந்திருக்கலாகாது பாப்பா”

என்று பாடிய பாரதி தன் சிறுவயதில் ஓடிப் பிடித்து விளையாடவில்லை. அவருக்கு விளையாட்டில் ஆசை தான். ஆனால் அவருடைய தந்தை அவர் விளையாடுவதை அவ்வளவாக விரும்பவில்லை. தாயில்லாப் பையன் என்ற அளவிலே அவன்மேல் பாசம்கொண்டிருந்தாலும் தந்தை அவன் நன்றாகப் படிக்க வேண்டுமென்பதிலே அக்கறை காட்டினார்.

ஆறு, குளங்களில் ஆடிக்களித்து அவனோடொத்த சிறுவர்கள் மகிழ்வார்கள். மரங்களிலே ஏறிக் களிப்பார்கள். சாலைப் புளிய மரத்தில் ஏறி ஒருவன் புளியங்காய்களை உலுக்குவான். மற்றவர்கள் பொறுக்கு

வார்கள். மரமேறிக் களித்து அவர்களோடு ஓடியாடி மகிழ வழியில்லாமல் தவித்துக் கொண்டிருந்தான். அவனுக்கும் படிக்க வேண்டும் என்று ஆசைதான். ஆனால் படிப்பே கதி என்று சொன்னால் சோர்வு தட்டாதா! கணக்கு அவ்வளவு எளிதாக ஏறுவதாக இல்லை. படி படி என்ற தந்தையார்கூட ஆங்கிலமும் கணக்கும் படிக்க வேண்டும் என்று வற்புறுத்தினரே தவிர, தமிழையோ தமிழ் இலக்கியத்தையோ படிக்கும்படி கூறவில்லை. பாரதியாரின் ஆர்வமெல்லாம் தமிழ் இலக்கியங்களைப் படிப்பதில் இருந்தது. எனவே தனது தந்தைக்குத் தெரியாமல் கம்பராமாயணம், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு போன்ற தமிழ் இலக்கியங்களைப் படித்து வந்தான். படித்த இடம் எது தெரியுமா? பெருமாள் கோவில் வாகனங்களுக்கு அடியில். பாரதியோடு அவனது நண்பன் சோமசுந்தரமும் படித்து வந்தான். இந்தச் சோமசுந்தரம்தான் பிற்காலத்தில் டாக்டர் நாவலர் சோமசுந்தர பாரதியார் என்று புகழ் பெற்றவர். பாரதியின் மற்றொரு விளையாட்டுத் தோழர் அவரது மாமா சாம்பசிவம்.

எட்டயாபுரம் ஜமீன்தார் தமிழிலே மிகுந்த ஆர்வமுடையவர். ஆனால் அவருடைய ஆர்வமெல்லாம் சிருங்கார கவியைக் கேட்பதிலேதான். அவைக்களப் புலவர்கள் அதை அரசருக்கு அள்ளி வழங்குவதில் தாராளம் காட்டினார்கள். பாரதியார் சின்னச்சாமி ஐயரின் மகன் என்ற காரணத்தாலும், சிறுவயதில் கவிதை பாடும் ஆற்றல் அவனிடம் நிரம்பியிருந்த



காரணத்தாலும் அரசவைக்குச் செல்வதற்கு அவனுக்குத் தடையில்லை. தந்தைக்குத் தெரியாமல் பல கவிதைகள் அரசர் விரும்பும் வண்ணம் இட்டுக்கட்டி அரசவையில் பாடினான். அரசர் மகிழ்ந்தார். சிறுவன் வாய் மூலம் சிருங்காரக் கவி கேட்பதென்றால் அது ஒரு தனிச் சுவைதானே!

தமிழைக் கேட்டு ஆய்ந்த உள்ளம் கொண்ட ஜமீன்தார் பாரதியின் திறமையை நன்கு உணர்ந்திருந்தார். எனவே ஒரு முறை பாரதியின் தந்தை சின்னச்சாமி ஐயர் பாரதியைப் பற்றி ஜமீன்தாரிடம் முறையிட்டபோது ஜமீன்தார் சொன்னார்.

"அய்யர்வாள், பாரதி ஒரு பிறவிக் கவிஞன். எட்டையாபுரத்துக்குப் பெருமை தேடித்தர வல்ல ஆற்றல் பெற்ற இளங்கவிஞன். அவனுடைய கவிதை ஆற்றொழுக்குப் போலத் தானாகப் பொங்கி வழிகிறது. அவனது கவிதைக்கு அணை போடாதீர்கள். ஆதரவு கொடுங்கள்" என்றார்.

ஜமீன்தாரே சொல்லிவிட்ட பிறகு ஐயர் என்ன செய்ய முடியும்!

ஐயர் நடத்திவந்த பஞ்சாலை சரிவர இயங்கவில்லை. நஷ்டம் கண்டது. பொருளெல்லாம் இழந்து அல்லல்பட்டார்.

அப்பொழுதெல்லாம் இப்பொழுது இருப்பதுபோல ஒவ்வொரு ஊரிலும் பள்ளிகள் இருந்ததில்லை. பள்ளிப் படிப்புக்குத் திருநெல்வேலிக்குத்தான் செல்லவேண்டும். அதற்கான முயற்சிகளை எடுத்தார் ஐயர்.

## 5. தமிழர் நிலை

**நெல்லையூர் சென்றவ்வூணர் கலைத்திறன்**
**நேருமாறெனை எந்தை பணித்தனன்**
**.... .... .... ... ... ... .... .... ... ....**
**செலவு தந்தைக்கோர் ஆயிரம் சென்றது.**
**தீதெனக்குப் பல்லாயிரம் சேர்ந்தன**
**நலமொ ரெட்டுணையும் கண்டிலேனிதை**
**நாற்பதாயிரம் கோயிலிற் சொல்லுவேன்.**

தமிழ் மணக்கும் நெல்லையில் இந்துக் கலாசாலையில் ஆங்கிலம் கற்பதற்காகப் பாரதியை அனுப்பி வைத்தார் ஐயர். ஆங்கிலம் படிப்பதில் பாரதிக்கு சிறிதும் ஈடுபாடில்லை.

ஈடுபாடு இல்லாத நிலையிலும்கூடப் படிப்பு என்று வந்துவிட்டால் அதில் திறமை பெற்றவனாகவே பாரதி திகழ்ந்தான். எதையும் உடனே கிரகித்துக் கொள்ளும் 'ஏக சந்தக் கிரஹி'யாக பாரதி இருந்தான். ஆங்கிலத்திலே அவன் அரும் புலமை பெற்றான். பின்னாளிலே ஆங்கில அறிஞர்களே வியக்கும் வண்ணம் ஆங்கிலம் பேசும் திறமை பெற்றான்.

தனக்கென்று ஒரு இருக்கை இருக்கையிலே அதிலே நன்றாக அமர்ந்து கொள்ளாமல் மற்றவனுடைய இருக்கையிலே ஒண்டிக்கொண்டு அமரும் அறிவீனத்தைப் பாரதி வெறுத்தான். தாய்மொழியில் என்னென்ன அற்புதங்கள் அமைந்துள்ளன என்று



தெரிந்து கொள்ளாமல் ஆங்கிலத்தின் மோகத்தில் அடிமைப்பட்டுக் கிடப்பது மடமை என்று எண்ணினான். கம்பன் என்றால் யார் எனக் கேட்கும் மாணவர்கள் அன்றிருந்தார்கள். தமிழைப் பேசுவதே இழுக்கு என்று எண்ணிய பெரியவர்களும் இருந்தார்கள். இந்த நிலையைக் கண்டு மனம் கொதித்தான் பாரதி எழுதுகிறான்.

"இங்கிலீஷ் பள்ளிக்கூடங்களுக்குப் போய்த் தேறினவர்களிடம் மனச்சாக்ஷிப் படியும் தன் அறிவுப் பயிற்சியின் விசாலத்துக்குத் தகுந்தபடியும் நடக்கும் யோக்யதை மிகமிகக் குறைவாக இருக்கிறது. இங்கிலீஷ் பள்ளிக்கூடங்களில் எத்தனையோ சாஸ்திரங்கள் —நிஜ சாஸ்திரங்கள், பொய்சாஸ்திரங்கள், இரண்டும் கலந்தன—எத்தனையோ வித சாஸ்திரங்கள் பயிற்றுகிறார்கள். ஆனால் ஸ்வதந்திரம், ஆண்மை, நேர்மை, உண்மை, வீர்யம்—இவை அத்தனை ஜாக்கிரதையாகக் கற்றுக் கொடுப்பதில்லை. அதிலும் ஒருவன் மனமறிந்த உண்மையின்படி ஒழுகவேண்டும் என்றும் அங்ஙனம் ஒழுகாதிருத்தல் மிகவும் அவமானமும் பாவமுமாகும் என்றும் கற்றுக் கொடுக்கும் வழக்கம் இல்லை"—வாய்ப் பேச்சு ஒரு மாதிரியாகவும் செய்கை வேறொரு மாதிரியாகவும் உடையோரின் உறவு கனவிலும் கொள்ளுதல் தீது."

பாரதி ஆங்கிலக் கல்வி முறையையும் அதைக் கற்றுக்கொண்டு குதித்த நம்மவர்களின் அறியாமையையும் கண்டு கொதித்தான்.

"முன்னர் நாடு திகழ்ந்த பெருமையும்
மூண்டிருக்கும் இந்நாளின் இகழ்ச்சியும்
பின்னர் நாடுறு பெற்றியும் தேர்கிலார்
பேடிக் கல்வி பயின்றுதல் பித்தர்கள்
என்ன கூறி மற்றிங்ஙன் உணர்த்துகேன்
இங்கிவர்க்கென உள்ளம் எரிவதே"

பாரதி பயின்று வந்த நாளில் தமிழ்க் கூட்டங்களுக்கு ஆங்கிலத்தில் அழைப்பிதழ் அடித்துக் கொடுத்தார்கள்.

"நமது ஜனத் தலைவர்கள் இங்கிலீஷில் யோசிப்பதையும் பேசுவதையும் நிறுத்தினாலொழிய நமது பாஷை மேன்மைப்பட இடமில்லை" என்று பின்னாளில் திட்டவட்டமாக எழுதினான்.

'பந்தாடும் போதும், சீட்டாடும்போதும் ஆசாரத் திருத்த சபைகளிலும், வருணாசிரம சபைகளிலும் எங்கும் எப்போதும் இந்தப் 'பண்டிதர்கள்' இங்கிலீஷ் பேசும் வழக்கத்தை நிறுத்தினால், உடனே தேசம் மாறுதலடையும். இங்கிலீஷ் படித்த தமிழ் மக்கள்—முக்கியமாக, வக்கீல்களும் பள்ளிக்கூடத்து வாத்தியார்களும்—தமது வாக்கிலும் மனதிலும் தமிழரசியைக் கொலுவிருக்கும்படி செய்து வணங்க வேண்டும் என்றும் அதுவே இப்போதுள்ள ஸ்திதியில் தமிழ் வளர்ப்புக்கு மூல சாதனமாகுமென்றும் அறிக்கையிட்டுக் கொள்கிறேன்" என்று தன் நாளில் தமிழர் இருந்த நிலையைத் தெளிவாகப் படம்பிடித்துக் காட்டினான்.



இந்த நிலை இன்றும் மாறிவிட்டதாகச் சொல்ல முடியாது. கல்லூரி மாணவர்கள் 'ஆங்கிலத்தில்' பேசுவதை, ஏன்—தப்பும் தவறுமாகப் பேசுவதையே—மதிப்பு என எண்ணுகிறார்கள். கல்லூரி மாணவிகள் ஒருவரை ஒருவர் 'மேன்' என்று அழைத்து ஆங்கிலத்தில் விளாசித் தள்ளும் நிலை இன்றிருக்கிறது. பள்ளிக்குழந்தை அப்பாவை 'டாடி' என்றும் அம்மாவை 'மம்மி' என்றும் அழைக்கின்றன. பெற்றோர்கள் அப்படி அழைக்கப் படுவதிலே பூரிப்படைகிறார்கள்.

பாரதி அன்று சுட்டிக்காட்டிய அறியாமை நிலையிலிருந்து நாம் இன்னும் விடுபடவில்லை. பள்ளிக் கூடங்கள் மட்டுமன்று. பத்திரிகைகளும் இன்று அந்த நிலைக்கு இழிந்துவிட்டன. சில தமிழ்ப் பத்திரிகைகளில் பாதிக்குமேல் ஆங்கில எழுத்துக்களைப் பார்க்கிறோம். கதைகளில் யதார்த்தம் என்று சொல்லிக் கொண்டு ஆங்கிலத்தை அப்படியே பயன்படுத்துகிறார்கள். கவிதைகள்கூட விதிவிலக்கல்ல. புதுக் கவிதை என்று சொல்லிக்கொண்டு ஆங்கிலத்தில் முதுகு சொரிந்து கொள்ளும் நிலை இன்றிருக்கிறது.

"பாரதி, மீண்டும் பிறக்கமாட்டாயா?" என்ற ஏக்கம் கேள்விக் குறியாக நெஞ்சில் நிலைக்கிறது.

## 6 பால்ய விவாகம்

"பால ருந்து மதலையர் தம்மையே
பாதகக் கொடும் பாதகப் பாதகர்
மூலத் தோடு குலங் கெடல் நாடிய
மூடமூடநிர் மூடப் புலைபர்தாம்

**கோலமாக மணத்திடை கூட்டுமிக்**
**கொலையெனுஞ் செயல் லொன்றினை யுள்ளவும்**
**சால வின்னுமோ ராயிரம் ஆண்டிவர்**
**தாத ராகி அழிகெனத் தோன்றுமே!''**

—சுயசரிதை

பாரதியின் இயற்பெயர் சுப்பிரமணியன். சுப்பையா என்று செல்லமாக அழைத்தார்கள். சுப்பையாவினுடைய புலமையைப் போற்றி ஜமீன் தாரின் அரசவையிலே அவனுக்குப் 'பாரதி' என்று பட்டம் கொடுத்தார்கள். சுப்பையாவின் பதினென் ரும் வயதில் இந்தப் பட்டம் கிடைத்தது.

பட்டங்களுக்காகப் பாடியவனல்ல பாரதி. ஆனல் பட்டம் அவனை நாடி வந்தது.

பாரதி வாழ்ந்த காலத்திலே பெண்களை வயதுக்கு வருமுன்பே திருமணம் செய்து கொடுத்து விடவேண் டும் என்ற நிலை இருந்தது. அப்பொழுதெல்லாம் திருமணத்துக்கு வயது வரம்பு நிர்ணயிக்கப்பட வில்லை. கட்டை விரலை வாயில் சீப்பிக் கொண்டே மணப்பெண் மணவறையில் தந்தை மடியில் அமர்ந் திருக்கும் காட்சி சர்வ சாதாரணம். தன் கணவனை விளையாட்டுத் தோழனை எண்ணி அவனோடு 'கண்ணு மூச்சி' விளையாடுகிற மணமான குழந்தை களும் உண்டு. குழந்தை தந்தையின் மடியில் தூங்கிக் கொண்டிருக்கும். மணப் பையன் தூங்கிக் கொண்டி



ருக்கும் குழந்தை கழுத்தில் தாலி கட்டுவான். இப்படிப் பட்ட நிலையில் அன்று திருமணங்கள் நடந்து கொண்டிருந்தன.

'இன்று' என்று அங்கே குறிப்பிடப்பட்டுள்ள காலம் நூறுண்டுகளுக்கு முன்னுள்ள காலம் அல்ல. மிகச் சமீபத்திய காலம்தான். நம் தாய் தந்தையர் களைக் கேட்டுப் பார்த்தால் தெரியும். சில சமயங்களில் அவர்களுக்கு அந்த மாதிரித் திருமணம் நடந்திருக்க லாம். ஏன், சமீபத்தில் வடநாட்டு மந்திரி ஒருவர் தன் சிறு பெண் குழந்தைக்குத் திருமணம் செய்து கொடுத்த செய்தி செய்தித்தாள்களில் அடிபட்டதே! வடநாட்டில் இன்னும் பல இடங்களில் குழந்தை மணங்கள் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன.

பாரதி பால்ய விவாகத்தை வெறுத்தான். ஆனல் அவருக்கே அப்படித்தான் நிகழ்ந்தது. பாரதிக்கு அப் பொழுது பதினைன்கு வயது. ஏழு வயதுச் செல்லம் மாளை அவருக்கு மணம் செய்து வைத்தார்கள். வாழ்க்கை என்றால் என்ன என்று தெரியாத வயதிலே அவர்கள் வாழ்வில் ஒன்ருக இணைக்கப்பட்டார்கள். தனக்கு இளவயதில் இப்படித் திருமணம் செய்து வைத்துவிட்டார்களே என்று வருந்தினர். அது சரி யில்லை ஒன்று தெரிந்தும் தடுக்கும் திறன் இல்லை.

''தீங்கு மற்றிதில் உண்டென்று அறிந்தவன்
செயலெதிர்க்கும் திறனிலனுயினேன்''

என்கிருர்.

''சாத்திரங்கள் கிரியைகள் பூசைகள்
சகுன மந்திரம் தாலி மணியெலாம்
யாத்தெனைக் கொலை செய்தன ரல்லது
யாது தர்ம முறையெனல் காட்டிலர்
... ... ... ... ... ... ... ... ... ... ...
மூத்தவர் வெறும் வேடத்தில் நிற்கும்கால்
மூடப்பிள்ளை அறம் எவண் ஓர்வதே''

என மனம் நொந்து பாடுகிறார்.

இப்படித் தனக்குச் சிறுவயதில் திருமணம் நடைபெற்றுவிட்ட அனுபவத்தால் அவர் 'பெண் விடுதலை' வேண்டிப் பின்னாளில் பாடுபட்டபோது, 'பெண் விடுதலை'த் தீர்மானங்களில் முதல் தீர்மானமாக,

'பெண்களை ருதுவாகும் முன்பு விவாகம் செய்து கொடுக்கக் கூடாது' என்று அமைத்துக் கொடுத்தார்.

## 7. செய் தொழில்

**''தேசத்தார் புகழ் நுண்ணறிவோடுதான்**
**திண்மை விஞ்சிய நெஞ்சின னாயினும்**
**நாசக் காசினில் ஆசையை நாட்டினன்**
**நல்லன் எந்தை துயர்க்கடல் வீழ்ந்தனன்''**

பாரதியாரின் தந்தை சின்னச்சாமிஐயர் திண்மையான நெஞ்சுரம் கொண்டவர். சங்கடங்கள் அவரை சஞ்சலப் படுத்தியதில்லை. 'இடுக்கண் வருங்கால் நகுக' என்பதற்கேற்ப துன்பம் வந்துற்ற காலையும் முகம் கோணாமல் வாழ்க்கை நடத்தி வந்தார். அவர் நடத்தி வந்த பஞ்சாலை அவரைக் கைவிட்டுவிட்டது. அவர் அறிவு சான்றவர். அதன் பயனாலே பல நுண்ணிய கருவிகளை எல்லாம் நிறுவினார். பணம் பண்ணும் ஆசை அவரை ஆட் கொண்டது.



''வேர்ப்பு வேர்ப்பப் பொருள் செய்வ
தொன்றையே
மேன்மை கொண்ட தொழிலெனக்
கொண்டனன்''

வாணிகம் செய்வதற்கு அறிவு மட்டும் இருந்தால் போதாது. ஆற்றல் வேண்டும். நம்பினவர் கைவிடாதிருக்க வேண்டும். சின்னச்சாமி ஐயரிடம் அறிவிருந்தது. ஆற்றல் இருந்தது. ஆனால் நம்பினவர்கள் கைவிட்டு விட்டார்கள்.

''ஓங்கி நின்ற பெருஞ் செல்வம் யாவையும்
ஊணர் செய்த சதியில்இழந்தனன்''

பணம் இழந்த நிலையிலும், அவர் மன உறுதி இழக்கவில்லை. தன்னைப் பாராட்டிப் புகழ்ந்து பேசிய நண்பர்கள் காணாததுபோல் சென்றபோக்கு அவரைச் சற்றே தாக்கியது.

''பாங்கி நின்று புகழ்ச்சிகள் பேசிய
பண்டை நண்பர்கள் கைநெகிழ்ந் தேகினர்
வாங்கி உய்ந்த கிளைஞரும் தாதரும்
வாழ்வு தேய்ந்தபின் யாது மதிப்பரோ''

கிளைஞர்களை அதிகமாகத் தாங்குவதாலே மனிதன் தன் வளம் இழக்கிறான். இழப்பது மட்டுமல்ல; அவன்

பொருள் இழக்கும் நிலையில், யார் யாரை அவன் தாங்கினுரே அவர்களெல்லாம் அவனை உதாசீனப் படுத்திவிட்டுச் செல்லும் அவல நிலைக்கும்அவன் ஆட் பட வேண்டியிருக்கிறது. அதுதான் தாங்கமுடியாத கொடுமை. இது பாரதியாரின் மனத்தில் ஆழமாகப் பதிந்திருக்க வேண்டும். எனவேதான் பாரதி 'புதிய ஆத்திசூடி'யில்,

''கிளைபல தாங்கேல்'' என்றுஎழுதினுர் போலும்.

நண்பரும் சுற்றமும் கைவிட, கையில் இருந்த பொருளெல்லாம் கரைய, சின்னச்சாமி ஐயர் உடல் நலிந்தார், பாரதிக்குப் பதினைந்த வயது நடந்து கொண்டிருக்கும்போது அவரது தந்தை இறைவனடி சேர்ந்தவிட்டார்.

''தந்தை போயினன் பாழ்மிடி சூழ்ந்தது.
தரணி மீதினில் அஞ்சலென் பாரிலர்
சிந்தையில் தெளிவில்லை உடலினில்
திறனுமில்லை, உரனுளத் தில்லையால்
மாந்தர்பால் பொருள் போக்கிப் பயின்றதாம்
மடமைக் கல்வியால் மண்ணும் பயனில
எந்த மார்க்கமும் தோன்றிலதென் செய்கேன்
ஏன் பிறந்தனன் இத்துயர் நாட்டிலே''

தாய் தந்தையற்ற அனுதையாகப் போய்விட் டார் பாரதி. மணமானவர். என்ன செய்வார். அந்த நிலையில் எட்டையபுரம் அவருக்குக் கைகொடுக்க வில்லை. உற்ருர் ஒதுங்க மற்ருேர் பதுங்க பாரதிக்கு



விழி பிதுங்கியது. ஒரு வாயிலை அடைக்கிற இறைவன் இன்னெரு வாயிலை அதற்கு முன்னதாகவே திறந்து வைத்து விடுகிருன்.

காசியிலிருந்து பாரதிக்கு அழைப்பு வந்தது. கல்வி கற்க அங்கு வரும்படி அத்தை குப்பம்மாள் அழைப்பு விடுத்தாள். கங்கைக் கரையை நோக்கி, கவிஞர் பயணம் தொடங்கினுர்.

## 8. மீசை பாரதி

''காசி நகர்ப் புலவர் பேசும் உரைதான்
காஞ்சியில் கேட்தபற்கோர் கருவி செய்வோம்.''

காசிநகர் சென்று அத்தையின் வீட்டில் தங்கிப் படித்தார் பாரதி. அங்கே வடமொழி, ஹிந்தி முதலியன படித்தார். உருது, ஹித்துஸ்தானி போன்ற மொழிகளையம் மிகவும் லாவகமாகக் கையாளும் திறமை பெற்ருர். இதைப் பற்றி அவரே எழுதுகிருர்.

''சிறு பிராயத்திலேயே நான் காசிப் பட்டணத் தில் சல்வி பயின்று கொண்டிருந்தேன். அங்கு எனக்கு ஹிந்துஸ்தானி பாஷை பழக்கமாயிற்று. எனக்கு ஹிந்திதான் மிகவும் நன்ருகத் தெரியும் எனினும் ஹிந்துஸ்தானி அல்லது உருது மேற்படி ஹிந்தி பாஷையில் பார்சி, அரபுச் சொற்கள் சேர்ந்ததே ஆகுமாதலால் நான் இதிலும் நல்ல பழக்கமுடைய வனுனேன்.'

களையெல்லாம் கடந்தபுனிதர் என்பதை நன்குபுரிந்து கொண்டார்.

காசி அறிஞர்கள் நிறைந்த நகரம். கங்கை புனிதம் செய்யும் அந்த மாநகரில் அடிக்கடி பிரசங்கங்கள் நடைபெறும். மத சம்பந்தமான பிரசங்கங்களோடு அரசியல் உரைகளும் அடிக்கடி நிகழும். அந்த உரைகளையெல்லாம் கேட்டார் பாரதி. அவர் உள்ளத்திலே தேசபக்தி சுடர்விட்டுப் பிரகாசித்தது. வடநாட்டு மக்களைப்போலதனதுஉடையமைப்பைமாற்றிக் கொண்டார். பஞ்ச கச்சம், கறுப்புக் கோட்டு, தலைப்பாகை இவை கனகச்சிதமாக அவருக்குப் பொருந்தின. பாரத தேவியின் சேனு சமுத்திரத்தில் தன்னை தளபதியாக அவர் பாவித்துக் கொண்டார். நெஞ்சு நிமிர்ந்த நடை, அஞ்சுதல் அறியா வீரவிழிப்பார்வை, தங்கு தடையின்றிப் பேசும் கம்பீரம், வழவழா என்றெல்லாமல் மனத்தில் பட்டதைச் சட்டென்றுசொல்லி விடும் நாணயம் இவையெல்லாம் பாரதியின் தனி முத்திரைகள்.

இன்னறும் நீர்க் கங்கையாறு அது இந்தியா பெற்றதோர் பேறு: வட்டத்தின் வில்லைப்போல வளைந்து வருணை, அசி என்ற இரண்டு நதிகளுக்கிடையே நெளிந்து கொண்டிருக்கும் அந்த கங்கைக் கரை, பல்வேறு பண்பாடு கொண்டுள்ள மக்கள் கூடி, குளித்து களித்து அமையும் அழகு, வாழ்வின் கடைசிப் பயணத்தைத் தொடங்கி விட்டவர்களின் கூடுகளை நக்கிக் களிக்கும்தீக்கொழுந்துகளின் நாட்டியம், கழுகு



களின் ஆலவட்டம் இவையெல்லாம் நீங்கா நினைவாக மிகவும் பசுமையாக அவர் உள்ளத்திலே திகழ்ந்தன.

அங்கே அறிஞர்களின் பேச்சைக்கேட்ட போதெல்லாம் அவர் தமிழ் நாட்டு மக்களும் இவ்வரிய கருத்துப் பொக்கிஷங்களைக் கேட்கவேண்டும் என்று ஆசைப்பட்டார். அந்த ஆசைதான்,

“காசி நகர்ப் புலவர் பேசும் உரைதான்
காஞ்சியில் கேட்பதற்கோர் கருவி செய்வோம்”

என்று அவரைப் பாட வைத்தது.

வடநாட்டில் இருந்தாலும் தமிழ் நாட்டின் நினைவு அவரை வாட்டியது. தமிழ் நாட்டிற்குத் திரும்பும் வாய்ப்புக்காகக் காத்திருந்தார். அந்த வாய்ப்பும் ஒரு நாள் வந்தது.

எட்டையாபுரம் அரசர் காசிக்கு வந்திருந்தார். அவர்பாரதியை எட்டையாபுரம்வரும்படி அழைத்தார். அவரும் உடனே கிளம்பிவிட்டார். எட்டையாபுரத்தில் அரசவைப் புலவராகப் பதவி ஏற்றுர்.

## 9. கவிதை ஊடல்

வாராய்! கவிதையாம் மணிப்பெயர்க் காதலி
பன்னுள் பன்மதி ஆண்டுபல கழிந்தன,
நின்னருள் வதனம் நான் நேருறக் கண்டே....
... ... .... .... .... ... .... ... ... .... ... ...

தென்திசைக் கண்ணொடு சிற்றூர்க் கிறைவனாய்
திருந்திய ஒருவனைத் துணையெனப் புகுந்தவன்
பணிசெய இசைந்தேன், பதகீ நீ யென்னைப்
பிரிந்துமற் றகன்றனை பேசொணா நின்னருள்
இன்பமத் தனையும் இழந்துநான் உழன்றேன்
சின்னாள் கழிந்தபின் யாதெனச் செப்புகேன்!
நின்னொடு வாழ்ந்த நினைப்புமே தேய்ந்தது

—கவிதா தேவி அருள் வேண்டல்

வேண்டி அழைத்து வந்த பதவியும் கொடுத்துச் சிறப்புச் செய்தான் மன்னன். அவனும் தமிழாய்ந்த நெஞ்சினன். ஆனால் அவன் ஆய்வெல்லாம் கற்பனையில் கன்னியரைத் துகிலுரித்துப் பார்த்தது. அன்று நாடு இருந்த நிலையில் தேச உணர்ச்சியைத் தூண்டுவதற்குப் பயன்பட வேண்டிய தமிழ் தேக உணர்ச்சியைத் தூண்டுவதற்குப் பயன்பட்டது. பாரதிக்கு இது ஒப்பவில்லை. அப்படிப்பட்ட பாடல்கள் பாடவும் அவருக்கு மனமில்லை.

காசி நகர் வீதிகளில் கேட்ட வீர முழக்கங்கள் அவர் உள்ளத்திலே புயலாக வீசிக் கொண்டிருந்தன. ஒரு மன்னனை அண்டி வாழ்க்கை நடத்துவதா என்ற ஒறு வெறுப்பு நிலை அவர் உள்ளத்தை அழுத்திக் கொண்டிருந்தது. இளம் வயது முதல் தன்னோடுமனம் ஒன்றி உறவான கவிதை தன்னைக் கைவிட்டுப் போய்விட்டதோ என்று ஏங்கினார். மன்னனுடைய தமிழுக்குத் தலை வணங்கிய அவருடைய உள்ளம் அவன் பதவிக்குத் தலை வணங்க மறுத்தது.



அவ்வூரில் சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துசாமி தீக்ஷிதர் அவர்களின் சகோதரர் புதல்வர் சுப்புராம தீக்ஷிதர் என்பவர் குடியிருந்தார். அரசவைத் தமிழின் எரிச்சல் உள்ளத்தை உரசுகின்ற போதெல்லாம் சுப்புராம திக்ஷிதரின் தூய இசை கேட்டு உள்ளம் மகிழுவார் பாரதி. சுப்புராம தீக்ஷிதர் 1906-ம் வருடம் செப்டம்பர் மாதம் இறந்து போன போது பாரதி சென்னையில் இருந்தார். அவருடைய நினைவு அவரை வாட்டியது. 'இந்தியா' பத்திரிகையில் அவரைப் பற்றி எழுதினார்.

''மன்னரையும் பொய்ஞ்ஞான மதக்குரவர்
தங்களையும் வணங்க லாதேன்
தன்னனைய புகழுடையாய், நினைக்கண்ட
பொழுதுதலை தாழ்ந்து வந்தேன்;
உன்னருமைச் சொற்களையே தெய்வீகமாம்
எனக் கருதி வந்தேன்!
இன்னமொருக் காலிளசைக்கு ஏகிடினிவ்
வெளியன் மனம் என்ப டாதோ''

என்று வருந்தினார். மன்னர்களுக்கும் வணங்காத அவர் தலை மனம் ஈர்க்கும் இசைக்கு வணங்கியது.

சுப்புராம தீக்ஷிதருடைய இசைக் கலையில் பாரதி மயங்கியது போலவே, எட்டையாபுரம் சமஸ்தானத்தில் இருந்த ஐயங்கார் இளைஞர் ஒருவருடைய நாடகத்திலும் மயங்கியதுண்டு. கவின் கலைகளில் வல்லவர்களாக இருந்த ஒரு சிலருடைய நட்புத்தான் அரசரின் போக்கு விளைக்கும் புண்களுக்கு மாற்று மருந்தாக அமைந்தது.

கவிதை அவரோடு ஊடல் கொண்டது.

"திமிங்கில உடலும் சிறிய புன்மதியும்
ஓரேழ் பெண்டிரும் உடையதோர் வேந்தன்
தன்பணிக் கிசைந்தென் தருக்கெலாம் அழிந்து
வாழ்ந்தனன்.

என்று தன் எட்டையாபுர வாழ்க்கையின் வரிசையை உணர்த்துகிறார் மகாகவி. 'மகாகவி பாரதியார்' என்ற புத்தகத்தில் வ. ரா. அவர்கள் எழுதுகிறார்.

"ராஜாவின் சிங்கார ரசப் பேச்சு என்னைப் பலவீனப் படுத்தியதும் பயமுறுத்தியதும் போல, வெள்ளைக்காரர்களின் சட்டங்கூடச் செய்ததில்லை என்று பாரதியார் அடிக்கடி சொல்வதுண்டு."

உறுதியற்ற அரசனின் போக்கு, ஒத்துப் போகாத மனத்தின் வீம்பு இவற்றினிடையே போராடி, எட்டையாபுரத்தை விட்டுச் சென்று விடுவது என்ற முடிவுக்குப் பாரதியார் வந்தார்.

நெல்லைத் தமிழ் சுமந்து மதுரை நகர் வந்தடைந்தார்.

## 10. கவிதை வந்தது

அங்கமே தளர்வு எய்திய காலையும்
அங்கோர் புன்னரி தந்திடும் ஊன் உரை
சிங்கமே என வாழ்தல் சிறப்பு எனச்
செம்மை கூறி நம் தாய்ப் பெறும் தேயத்தைப்



பங்கமே பெறும் இந்நிலை நின்றுயர்
பண்டை மாண்பிடைக் கொண்டு இனி உய்த்திடும்
வங்கமே என வந்தனை வாழிநீ
வங்கமே நனி வாழிய வாழிய!

சங்கம் கண்ட மதுரையில் பாரதி பணியாற்றுவதற்காகச் சென்றார். அவருக்குத் தெரிந்த அன்பர் திரு. கோபால கிருஷ்ணய்யர் உதவியோடு மதுரைச் சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராய் 1904-ம் வருடம் ஆகஸ்டுமாதம் ஒன்றும்தேதி வேலைக்குச் சேர்ந்தார். காசியினின்றும் வந்து இரண்டாண்டுகள்கூட அவர் எட்டையாபுரத்தில் இருக்கவில்லை.

கட்டுப்பட்டுக் கவிபாடுவது அவருக்குப் பிடிக்கவில்லை. ஒரு நியதிக்கு உட்பட்டு ஒரு குறிப்பிட்ட நேரத்தில் மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதும் அவர் இயல்புக்கு ஒவ்வாத ஒன்று. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். அவரிடம் கல்வி கற்ற மாணவர்கள் மிகவும் பேறு பெற்றவர்கள். அவர்களில் சிலர் இன்றும் உயிரோடிருக்கலாம். பாரதி கல்வி போதிக்க வேண்டிய முறைகளைப் பற்றியெல்லாம் எழுதியிருப்பதைப் பார்க்கின்ற பொழுது அவர் ஒரு சிறந்த ஆசிரியராகத் திகழ்ந்திருப்பார் என்பதில் சந்தேகமில்லை.

ஆசிரியராக மூன்று மாதங்கள் மட்டுமே பணியாற்றியிருக்கிறார். 10-11-1904 அன்று வரைதான் அந்தப் பள்ளியில் பணி.

பாரதி 1904-ம் வருடம் நவம்பர் மாதம் சென்னையில் மிகப் பெயர்பெற்ற சுதேசமித்திரன் பத்திரிகையில்

உதவி ஆசிரியராகச் சேர்ந்தார். பாரதியார் சுதேச மித்திரனில் எப்படி வேலைக்குச் சென்றார் என்பதைப் பலர் பலவிதமாகக் கூறுகின்றனர். திரு. கோபால கிருஷ்ணய்யர் என்பவரின் உதவியால் சென்றார் என்று மகரிஷி சுத்தானந்த பாரதியாரும், திரு. இலக்குமண அய்யர் என்பவரின் உதவியால் சென்றார் என்று திரு. ஆக்கூர் அனந்தாச்சாரி அவர்களும் கூறியுள்ளனர்.

சுதேசமித்திரன் பாரதியினுடைய ஆற்றலுக்கு ஒரு வடிகாலாக அமைந்தது. அதில் சேர்ந்த சில மாதங்களுக்கு அவர் பின்னணியில் இயங்கிக்கொண்டிருந்தாலும், அவருடைய திறமையை நன்கு அறிந்து கொண்டு சுதேசமித்திரனின் ஆசிரியர் திரு. ஜி. சுப்பிர மணியய்யர் அவரை நன்கு பயன்படுத்திக் கொண்டார்.

பாரதியின் வார்த்தைக் கங்குகளைத் தாங்கி வந்தது சுதேசமித்திரன். தனது காவியத்தில் சடையப்ப வள்ளலை நிலைநிறுத்திய கம்பனைப்போல பாரதியும் தனது 'சந்திரிகையின் கதை' என்ற புதினத்தில் திரு. சுப்பிரமணிய அய்யர் அவர்களை ஒரு கதா பாத்திரமாகப் படைத்து நிலைநிறுத்தி விட்டார்.

"அக்காலத்தில் திருவல்லிக்கேணி வீரராகவ முதலித் தெருவில் ஜீ. சுப்பிரமணிய அய்யர் மஹா கீர்த்தி பெற்று விளங்கினார். அவருக்குக் கொடிய ரோகம் ஒன்றினால் உடம்பெல்லாம் முகமெல்லாம் சிதைந்து முள் சிரங்குகள் புறப்பட்டிருந்தன. இருந்தாலும் நிகரற்ற மனோ தைர்யத்துடன் அவர் தேசப் பொதுக் காரியங்களை நடத்திக் கொண்டிருந்தார்" என்று எழுதியுள்ளார்.



சுதேசமித்திரன் அவர் வாழ்க்கையின் திருப்பு முனையாக அமைந்தது. சுதேசமித்திரனை அவர் எந்த அளவு மதித்தார் என்பது, 1921-ம் வருடம் மார்ச்சு மாதம் 21-ந் தேதியன்று அவர் எழுதியுள்ள ஒரு கட்டுரையிலிருந்து அறிந்து கொள்ளலாம். இதோ அதன் பகுதி.

"இங்கிலாந்தில் சில முக்கியமான வாசகசாலைத் தலைவர்கள் இவ்வருஷத் தொடக்கத்தில், மற்றப் பழம் பத்திரிகைகளை விலைக்கிக் கொடுத்ததுபோல், 'லண்டன் டைம்ஸ்' பத்திரிகையை மட்டும் கொடுக்காமல் உலக சரித்திரத்துக்கு ஆதாரமாகச் சேகரித்து வைத்தார்களென்று தெரிவிக்கப்படுகிறது. தமிழ் நாட்டில் அத்தகைய பதவி நம் சுதேசமித்திரனுக்குக் கடவுள் அனுக்கிரஹம் செய்யும் படி பிரார்த்திக்கின்றேன்."

அது மட்டுமல்ல. ஒருமுறை சுதேசமித்திரன் இரு மணம் கொண்டிருப்பதாக ஒரு சிலர் சாடியபொழுது அவர்களுக்குப் பதில் கூறும் வகையில்,

"தென் இந்தியாவில் தேசியக்கக்ஷிக்கு மூல பலமாக சுதேசமித்திரன் பத்திரிகை யொன்றுதான் ஆரம்ப முதல் இன்று வரை ஒரே நெறியாக நிலைதவரு

மல் நின்று வேலை செய்து கொண்டு வருகிறதென்ற செய்தியைத் தமிழ் நாட்டில் அறியாதாரில்லை... அபிப் பிராய பேதம் உடையவர்களும் தேசாபிமானிகளாக இருப்பராயின், அவர்களை நாம் மிக மதிப்புடன்நடத்த வேண்டுமென்கிற நியாயத்துக்கு இத்தருணத்தில் சுதேசமித்திரன் பத்திரிகை ஓரிலக்கியமாகத் திகழ்ந்து வருகிறது. பரஸ்பர உணர்ச்சி தேச பக்தர்களுக்குள் எப்போதும் குன்ருதிருக்க வேண்டும்... இவ்வித உணர்ச்சி நம்மவருள் பலப்பட்டு சுதேசமித்திரன் முத லிய மேன்மையார்ந்த கருவிகளைப் போற்றிக் கையாண்டு, நம்மவரெல்லாரும் கூடி முயன்று பாரத மாதாவின் ராஜரீக விலங்குகளை நீக்கி, விடுதலை ஏற் படுத்திக் கொடுக்கப் போகிற ஸுதினம்—நல்ல நாள் எப்போது வரப் போகிறதென்பதை ஒவ்வொரு நிமிஷ மும் மிக ஆவலுடன் எதிர்பார்த்து நிற்கிறேன்''என்று எழுதினர்.

1905-ம் வருடம் அக்டோபர் மாதம் 16-ம் தேதி வங்காளம் இரண்டாகப் பிரிக்கப்பட்டது. ஆனால் அதற்கு முன்பே வங்கப் பிரிவினையை எதிர்த்து வங் காளத்திலும் நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் கிளர்ச்சி கள் தோன்றின. வங்காளம் கொந்தளித்தது. வங்கப் பிரிவினை ஏற்படுவதற்கு முன்பே வங்கத்தை வாழ்த்தி சுதேசி மாணவர்கள் கூட்டத்தில் பாரதியார் பாடினர்.

மாணவர்கள் என்ற வாணலியில்தான் அரசியல் கடலை நன்கு வறுபடும் என்பதை பாரதி நன்கு அறிந் திருந்தார்.



லாலா லஜபதிராயைத் தீவாந்திரம் செய்த சம யத்தில் அரசை ஆதரித்து சென்னை மகாஜனசபை யைச் சேர்ந்த சில வக்கீல்கள் கூட்டல் நடத்திய பொழுது மக்கள் அவர்களை மதிக்கவில்லை. அதைப் பற்றி பாரதி எழுதும்போது,

''சர்க்காரிலே 'ஸர்' என்றும் 'உர்' என்றும் பட்டம் பெற்றுத் திரிந்தவர்களை எல்லாம் ஜனங்கள் மதிப்புடன் நடத்திய காலம் போய் இப்போது அவர் களைப் பகிரங்க ஸ்தானங்களிலே பேசவொட்டாதநிலை மைக்குக் கொண்டு வந்து விட்டார்கள்.

சென்னை மாணுக்கர்களிலே பெரும்பாலார் வெளி யூருக்குச் சென்றிருந்த படியால் பழைய கட்சியார் இம் மாட்டோடு பிழைத்தார்கள். ஒருவாரத்திற்கு முன் இந்தப் பொதுக்கூட்டம் நடந்திருந்தால் நமது மயி லாப்பூர் நண்பர்களின் ஸ்திதி இன்னும் வேடிக்கை யாய் இருந்திருக்கும்'' என்று குறிப்பிட்டார்.

தேசபக்தி அவருடைய உள்ளத்திலே கொழுந்து விட்டெரிந்தது. நாடு விழிப்புறும் வண்ணம் தேச பக்திப் பாடல்கள் எழுதினர். தாம் எழுதினல் மட்டும் போதாது, தன்னைப்போலவே பிறரும்எழுதவேண்டும் என்று ஆசைப்பட்டார். அப்படிப் பலரும் எழுதினல் தாமே அவற்றைத் தொகுத்து ஒரு புத்தகமாக வெளி யிடலாம் என எண்ணினர். இந்த எண்ணம் ஒரு விண்ணப்பமாக சுதேசமித்திரன் பத்திரிகையில் 13-2-1906 அன்று வெளியாகியது.

“எமது தாய்நாடாகிய பாரதாம்பிகையின் பெருமையை வருணித்து ஆங்கிலத்திலும் தமிழிலும் பல்வேறு காலத்து பல்வேறு புலவர்களால் பாடப் பெற்ற செய்யுள் மணி ஓர் மாலையாகப் புனைந்து பதிப்பிக்கக் கருதியிருக்கின்றேனாதலின் பண்டைத் தமிழ் நூல்களில் பாரதநாடு முழுதினையும் ஒருங்கே புகழ்ந்து கூறப்பட்டிருக்கும் பாடல்களை அறிஞர் தெரிந்து அனுப்புவார்களாயின் அவர்மாட்டு மிக்க கடப்பாடுடையவனாவேன். தமிழ்ப் புராணங்களிலும் இதிகாசங்களிலும் நாட்டுப் படலங்களில் நிடதம், கோசலம் முதலிய பகுதிகளைப் பற்றி எழுதப்பட்டிருக்கும் வருணனைகள் பயன்படமாட்டா. தற்காலத்தே தமிழ்ப் புலமையிற் சான்று விளங்கும் பெருமக்கள் புதியனவாக ‘தேசபக்திப்’ பாக்கள் புனைந்தனுப்புவாராயின் அவையும் நன்றியறிவுடன் ஏற்றுக் கொள்ளப்படும்.

சிறிய ஆற்றலுடையேனாகிய யான் இப்பெரிய தொழிலை நிறைவேற்றுவதன் கண்ணே எவ்வாற்றானும் துணை புரிய விரும்புவோர் காலப் பிரியம் செய்யலாகாதென்று பிரார்த்திக்கின்றேன்.

இங்ஙனம்

சி. சுப்ரமணிய பாரதி

சென்னை.”

அவர் எதிர்பார்த்த பாடல்கள் கிடைக்கப் பெறுமையாலே தாமே எழுதி ‘சுதேச கீதங்கள்’ என்ற நூலை வெளியிட்டார்.



நாட்டு மக்கள் தேசபக்தியின்றி இருந்த நிலை கண்டு உள்ளம் கொதித்தார். அவர் குமுறல் பாட்டாக வெளிவந்தது.

“ஆணெல்லாம் பெண்ணாய் அரிவையரெலாம்
விலங்காய்
மாணெல்லாம் பாழாகி மங்கிவிட்ட திந்நாடே”

என்றும்,

“வேத உபநிடத மெய்ந்நூல்கள் எல்லாம் போய்
பேதைக் கதைகள் பிதற்றுவர் இந்நாட்டினிலே”

என்றும்,

“பொன்னும் மணியும்மிகப் பொங்கிநின்ற
இந்நாட்டில்
அன்னமின்றி நாளும் அழிவார்கள் எத்தனை
பேர்!”

என்று அவர் வருந்திப் புலம்பும்போது இன்றும் அந்த ஏக்கத்திற்கு விடிவு பிறக்கவில்லையே என்று நம் மனம் அங்கலாய்க்கிறது.

## 11. தீப்பட்டெரிந்தது

**வீரமிக்க மராட்டியர் ஆதர**
**மேவிப் பாரத தேவி திருநுதல்**
**ஆரவைத்த திலக மெனத்திகழ்**
**ஐயனல்லிசைப் பாலகங்காதரன்**

**சேரலர்க்கு நினைக்கவுந்தீயென**
**நின்ற வெங்கள் திலக முனிவர்கோன்**
**சீரடிக்கம லத்தினை வாழ்த்துவேன்**
**சிந்தை தூய்மை பெறுகெனச் சிந்தித்தே!**

பாரதியாரின் தேசபக்தி சுடர் விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. அவருடைய எழுத்துக்களின் கனத்தைத் தாங்கும் சக்தி சுதேசமித்திரனுக்கு இல்லை. எனவே பாரதி அதைவிட்டு விலகி "இந்தியா" என்ற பத்திரிகைக்கு ஆசிரியரானார். 'இந்தியா' பத்திரிகைக்கு அதிபர் திருமலாச்சாரியார் என்பவர்.

'இந்தியா' வாரத்துக்கு ஒரு முறை வெளிவந்தது. சிவப்புத் தாளில் அச்சிடப்பட்டது.

பத்திரிகை நடத்துபவர்கள் தங்கள்பத்திரிகைக்கு ஒரே விலையைத்தான் வைத்திருப்பார்கள். ஆளின் தகுதிக்குத் தகுந்தாற் போல் விலை இருக்காது. ஆனால் பாரதியார் தனது பத்திரிகைச் சந்தாவில் ஒரு புதுமை செய்தார்.

**'இந்தியா' பத்திரிகையின் ஆண்டுச் சந்தா விவரம்**

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| எல்ல கவர்ன்மெண்டாருக்கும் | 50 | 0 | 0 |
| ஜமீன்தார்கள், ராஜாக்கள் முதலியவர்களுக்கு | 30 | 0 | 0 |
| மாதம் ரூ. 200க்கு மேற்பட்ட வருமானம் உடையவர்களுக்கு | 15 | 0 | 0 |
| மற்றவர்களுக்கு | 30 | 0 | 0 |



முதன் முதல் 'கார்ட்டூன்' போட்ட முதல் தமிழ்ப் பத்திரிகை 'இந்தியா' தான்.

அந்தக் காலத்தில் காங்கிரசில் இரண்டு பிரிவினர் இருந்தனர். பூரண சுதந்திரம்தான் குறிக்கோள் என்று கொண்டவர்கள் தீவிரவாதிகள். படிப்படியாக மனுச் செய்து பலன்களைப் பெறவேண்டும் என்று வாதாடியவர்கள் மிதவாதிகள். தீவிரவாதிகளின் தலைவர் லோகமான்ய பால கங்காதர திலகர். திலகரே பாரதியின் அரசியல் குரு.

விபின சந்திர பாலர் என்ற அரசியல் தலைவரை அழைத்து வந்து சென்னையில் பேச வைத்தவர் பாரதி. அவர் பேச்சில் கனல் தெறித்தது. அவர் பேச்சாலே சென்னையில் ஒரு புதிய தீவிரம் பிறந்தது. விதேசிப் பொருட்களை மக்கள் எரித்தார்கள். 1906—ல் கல்கத்தாவில் நடந்த காங்கிரசில் தீவிரவாதிகளின் கை ஓங்கியிருந்தது. அங்கே சில தீர்மானங்களை நிறைவேற்றினார்கள். சுதேசிப் பொருட்களையே உபயோகித்தல், அந்நிய நாட்டுப் பொருட்களை பகிஷ்கரித்தல், நாட்டுக் கல்வி, சுயராஜ்யம் இவற்றைப் பற்றிச் சந்தேகத்திற்கிடமின்றி தீர்மானம் நிறைவேற்றியிருந்தார்கள். இத்தகைய தீர்மானங்கள் மிதவாதிகளையும் அரசாங்கத்தையும் அஞ்ச வைத்தன. தீவிரவாதிகளின் கை ஓங்கிவிடக் கூடாதென்பதற்காக மிதவாதிகள் திட்டம் போட்டு 1907-ல் நாகபுரியில் நடத்துவதாகத் தீர்மானிக்கப் பட்டிருந்த காங்கிரஸ் மாநாட்டை சூரத்தில் நடத்துவதாக முடிவெடுத்தார்கள். இது தீவிரவாதிகளுக்குப் பிடிக்கவில்லை.

சென்னையிலிருந்தும் 100 பிரதிநிதிகளுக்குக் குறையாமல் சூரத் காங்கிரஸுக்குச் செல்வது என்று முடிவாயிற்று. சென்னையில் வ. உ. சிதம்பரம் பிள்ளை தீவிரவாதிகளில் ஒருவர். வ. உ. சியும் பாரதியும் நெருங்கிய நண்பர்கள். வ. உ. சிதம்பரம்பிள்ளை பாரதியை அவரது 'இந்தியா' பத்திரிகை ஆபீசில் தான் முதன் முதல் சந்தித்தார்.

கடற்கரையில் அமர்ந்து அவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது, வ. உ. சி. பாரதியைப் பார்த்து,

''என் உள்ளத்தில் மின்மினிப் பூச்சி போன்று மின்னிக் கொண்டிருந்த தேசாபிமான நெருப்பு, விளக்குப்போல ஒளி விட்டுப் பிரகாசிக்கிறது' என்றார். உடனே கடற்கரையில் மின்சார விளக்குகள் 'பளிச்' சென ஒளி விட்டு எரியத் தொடங்கின. பாரதி உடனே பிள்ளையைப் பார்த்து,

''பிள்ளைவாள், சக்தி துணைசெய்வாள், நம் உள்ள ஒளி பிரகாசிக்கும்போது மின் ஒளியையும் பிரகாசிக்கச் செய்தது நம் அன்னை பராசக்தியே! அவள் வாழ்க! இனி நம் முயற்சி வெற்றி, எடுத்ததெல்லாம் வெற்றி என்பதற்கான சுபதகுனம் இதுதான். வாழி அன்னை வாழி அம்மை, சக்தி வாழி'' எனப் பேசினார்.

பாரதியை வ. உ. சி. மாமா என்று அழைக்கத் தொடங்கினார்.

சூரத் காங்கிரஸுக்கு வரும் பிரதிநிதிகளுக்கு ஆகும் செலவில் பாதியை வ. உ. சியும், பாதியை மண்டையம் ஸ்ரீநிவாசாசாரியாரும் ஏற்பது என்று



முடிவாயிற்று. பாரதி சுதேசமித்திரனில் ஒரு அறிக்கை விடுத்தார்.

17 டிசம்பர் 1907 பிலவங்க மார்கழி

சூரத்தில் நடக்கின்ற காங்கிரசுக்கு நாங்கள் எல்லோரும் இவ்விடமிருந்து நாளது டிசம்பர் மாதம் 20-ந் தேதி வெள்ளிக்கிழமை மாலையில் ரிசர்வ் வண்டிகள் மூலமாய்ச் செல்லுகிற படியால் இந்த ராஜதானியிலிருந்து காங்கிரசுக்குச் செல்லும் பிரதிநிதி (டெலிகேட்ஸ்)களும் பார்ப்பவர்களும் (விசிட்டர்ஸ்) இது பார்த்தவுடன் அவர்கள் புறப்படும் விவரத்தைத் திருவல்லிக்கேணி துளசிங்கப் பெருமான் கோயில் தெரு 87-வது நண்பர் சுதேசி கிருஹத்தாருக்குத் தெரிவிக்கும் படிக்கும் நாளது மாதம் 20-ந் தேதி காலையில் மேற்படி கிருஹத்திற்கு வந்து சேரும் படிக்கும் கேட்டுக் கொள்கிறோம்.

—சி. சுப்பிரமணிய பாரதி

20-ந் தேதி ஒரு பிரிவும் 21-ந் தேதி ஒரு பிரிவுமாக தீவிரவாதிகளின் பிரதிநிதிகள் சூரத் காங்கிரசுக்குப் புறப்பட்டார்கள்.

திலகரை சூரத் காங்கிரசுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று நினைத்தார்கள். ஆனால் தகராறு ஏற்படக் கூடாதென்பதற்காக திலகர் போட்டியினின்றும் விலகிக் கொண்டார். லாலா லஜபதிராயைத் தலைவராகப் பிரேரேபித்தார்கள். ஆனால் மிதவாதக் கட்சியார் ராஷ் பிகாரிகோஷ் என்பவரைத் தலைவராக்குவதில் முனைந்தார்கள். 26-ந்தேதி

பிற்பகல் 2½ மணிக்குத்தான் தீர்மானங்களின் நகல் திலகரிடம் கொடுக்கப்பட்டது.

1907-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 26-ந் தேதி மாநாட்டுப் பந்தலில் 7000 பேருக்கு மேல் குழுமியிருந்தார்கள். வரவேற்புக் கமிட்டியின் தலைவர் திருபுவன் தாஸ் மால்வி டாக்டர் ராஷ் பிகாரி கோஷைத் தலைவராக முன் மொழியும்படிக் கேட்டுக் கொண்டார். அடுத்து சுரேந்திர நாத் பானர்ஜி மேடையில் ஏறினார். கூட்டத்தில் ஒரே கூச்சல். கூட்டம் அமளிதுமளிப் பட்டது. பானர்ஜியைப் பேசவிடவில்லை. எனவே கூட்டத்தை மறுநாளைக்கு ஒத்தி வைத்தார்கள்.

இரவெல்லாம் சமரச முயற்சிகள் நீடித்தன. பாலகங்காதர திலகர் பேச்சு வார்த்தைகளுக்குத் தயாராக இருந்தார். ஆனால் மிதவாதிகள் ஒத்துழைக்கவில்லை. இதற்கிடையில் திலகர் மால்விக்கு ஒரு குறிப்பு அனுப்பினார்.

"ஐயா, தலைவர் தேர்வில் பின் மொழிந்த பிறகு, பிரதிநிதிகளிடம் நான்பேச விரும்புகிறேன். ஒரு உருப்படியான திட்டத்துடன் ஒத்தி வைப்புத் தீர்மானம் ஒன்றைக் கொண்டுவர விழைகிறேன். என் பெயரை அழைக்கவும்.

தங்கள் அன்புள்ள,
பி. ஜி. திலக்
தக்காணப் பிரதிநிதி (பூனா)

இந்தக் குறிப்பைப் பெற்றுக் கொண்டதாகக்கூட மால்வி காட்டிக் கொள்ளவில்லை.



மறுநாள் பிற்பகல் ஒரு மணிக்கு (27-12-1907) சுரேந்திரநாத் பானர்ஜி தன் உரையைத் தொடங்கினார். கோஷ் தலைவர் ஆசனத்தில் அமர்ந்தார். திலகர் மால்விக்கு ஒரு நினைவூட்டல் சீட்டை அனுப்பினார். மால்வி பதில் ஏதும் கூறவில்லை. தன்னை அலட்சியப் படுத்துகிறார்கள் என்பதை உணர்ந்த திலகர் மேடை மேல் ஏறினார். கோஷ் அவரைத் தன் இடத்திற்குச் செல்லும்படி வேண்டினார்.

"நீங்கள் முறைப்படி தேர்ந்தெடுக்கப்படவில்லை. நான் பிரதிநிதிகளிடம் பேசுவதற்கு உரிமை உண்டு" என்றார் திலகர். இதற்கிடையில் சில மிதவாதி இளைஞர்கள் திலகர் பக்கம் பாய்ந்து சென்று அவரை மேடையினின்றும் கீழே இறங்கும்படி வற்புறுத்தினார்கள். இரண்டு பக்கமும் பிடித்து இழுத்தார்கள். கோகலே இரண்டு கையையும் வீசித் தடுத்துப் பார்த்தார். இதற்கிடையில் யாரோ எறிந்த செருப்பு சுரேந்திரநாத் பானர்ஜியின் மேல்விழுந்தது. வ. உ. சி. தலைமையில் தமிழ் நாட்டைச் சேர்ந்த பிரதிநிதிகள் மேடைக்குப் பாய்ந்து சென்று திலகருக்குப் பாதுகாப்பாக அணிவகுத்து நின்று கொண்டார்கள். நாற்காலிகள் பறந்தன. பெண்கள் அலறினார்கள். மேடையில் இருந்த தலைவர்கள் பின்பக்கக் கதவின் வழியாகத் தப்பித்தோம் பிழைத்தோம் என்று ஓடினார்கள். திலகரின் தொண்டர்கள் அவரை அலக்காகத் தூக்கிச் சென்று விட்டார்கள். பந்தல் பிய்த்தெறியப்பட்டது. மிதவாதிகள் ஏற்கனவே சிலகுண்டர்களை அடியாட்களாக வைத்திருந்தார்கள். அவர்கள் கம்பைச் சுழற்றி அடிக்கத் தொடங்கினார்கள். மண்டைகள்

உடைந்தன. ரத்தம் பெருக்கெடுத்தது. நண்பர்களும் எதிரிகளும் வேறுபாடின்றி அடி உதை பெற்ருர்கள். போலீசார் வந்தார்கள். கிளர்ச்சி அடங்கியது. எந்தவிதத் தீர்மானமும் இன்றி மாநாடு கால வரையின்றி ஒத்தி வைக்கப்பட்டது.

திலகர் பிளவுபட்ட காங்கிரசை இணைக்க எவ்வளவோ முயன்ருர். மிதவாதிகள் ஒத்து வரவில்லை. எனவே சூரத்திலேயே தனியாக ஒருகூட்டம்நடத்தித் தன் தொண்டர்களிடம் பேசினுர். அந்தக் கூட்டத்தில் பாரதியாரும் கலந்து கொண்டார். புதிய கட்சி உருவாகியது. பத்திரிகை மூலம் மிகவும் தீவிரமாக மக்களிடையே பிரசாரம் செய்யும்படி திலகர் வேண்டினுர். அன்று அவர்செய்த பிரசங்கம் பாரதியார்உள்ளத்திலே ஒரு புதிய எழுச்சியை ஊட்டியது. திலகரைத் தெய்வமாகவே பாரதி போற்றினுர். சூரத்தில் முதன் முதலில் திலகரைச் சந்தித்தபோது அந்தக் கண்களில் கண்ட காந்தசக்தியைக் கண்டு மயங்கி அப்படியே திலகரின் காலடியில் நெடுஞ்சாண் கிடையாகவிழுந்துவணங்கியதாகப் பாரதி கூறியுள்ளார். சைவர்கள் ஐந்தெழுத்து மந்திரத்தை எவ்வளவு பயபக்தியோடு ஓதுவார்களோ அவ்வளவு பக்தியோடு தேசபக்தர்கள் திலகர் நாமத்தைப் போற்ற வேண்டும் என்று பாரதி எழுதினுர். சென்னைக்குத் திரும்பி வந்த பிறகு "எனது காங்கிரஸ் யாத்திரை" என்று இரண்டணு விலையில் ஒருபுத்தகம் வெளியிட்டார்.

சூரத் பயணத்துக்குப் பின் பாரதியின் எழுத்தில் வலு ஏறியது. தீப்பொறி பறந்தது. அச்சம் அஞ்சத் தொடங்கிவிட்டது.



சூரத்காங்கிரசைப் பற்றி இண்டியன் அன்ரெஸ்ட்' என்ற புத்தகத்தில் ஸர் வாலண்டைன் சிரால் என்பவர் 'திலகரும் அவருடைய நண்பர்களும் தங்கள் அடாத செய்கையால் காங்ரகிஸ் மாநாட்டைப் பாழடித்து விட்டார்கள்' என்று எழுதினுர். ஆனல் உண்மையில் என்ன நடந்தது என்பதையும், திலகருடைய பெருமையையும் பாரதி இடைவிடாமல் தமிழ் நாட்டில் பறைசாற்றினுர்.

விபின சந்திர பாலருடைய பேச்சும், திலகரின் தீரமும், சூரத் காங்கிரஸ் நிகழ்ச்சிகளும் தமிழ் நாட்டில் ஒரு புதிய அரசியல் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தின. பாரதியின் வாழ்வில் இது ஒரு புதிய திருப்பு முனையாக அமைந்தது.

## 12. அரசின் அடக்குமுறை

"தண்ணீர்விட்டோ வளர்த்தோம்? சர்வேசா, இப்பயிரைக்
கண்ணீரால் காத்தோம் கருகத் திருவுளமோ?
மேலோர்கள் வெஞ்சிறையில் வீழ்ந்து கிடப்பதும்
நூலோர்கள் செக்கடியில் நோவதுவும் காண்கிலையோ?
எண்ணற்ற நல்லோர் இதயம் புழுங்கிபிரு
கண்ணற்ற சேய்போல் கலங்குவதுங் காண்கிலையோ?"

வாணிகம் செய்வதற்கும், பயணிகளை ஏற்றிச் செய்வதற்கும் கப்பல் ஓட்டுவது வெள்ளைக்காரனின் ஏகபோகமாக இருந்தது. இதைத் தடுத்துப் புரட்சி செய்ய எண்ணிய வ. உ. சி. பெருமுயற்சி எடுத்து

சுதேசிக் கப்பல் கம்பெனியைத் தொடங்கி தூத்துக் குடிக் கடலில் கப்பலைச் செலுத்தினர். மக்களிடையே அக்கப்பல் சிறந்த வரவேற்புப் பெற்றது. தூத்துக்குடிப் பஞ்சாலையில் தொழிலாளர் வேலை நிறுத்தத்துக்கு ஊக்கம் கொடுத்து வ. உ. சி. உதவி செய்தார். இதை யெல்லாம் கண்டு பொருதஅரசு, அவர் கலகக்காரர் என்று குற்றம் சாட்டி நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தது. கலெக்டர் விஞ்ச் வ. உ. சியைப் பல வாறாகக் கேள்வி கேட்டான். வ.உ.சி. சளைக்காமல் பதில் சொன்னர். இந்தச் செய்தி பாரதியின் காதில் விழுந்தது. உடனே பாடல் எழுந்தது. கேள்வி பதி லாக அதைப் பாரதி அமைத்திருந்தார்.

விஞ்ச்:— நாட்டி லெங்கும் சுதந்திர வாஞ்சையை
நாட்டினய்—கனல்—மூட்டினய்
வாட்டி உன்னை மடக்கிச் சிறைக்குள்ளே
மாட்டுவேன்—வலி—காட்டுவேன்.

வ.உ. சி.:— சொந்த நாட்டிற் பரர்க்கடிமை செய்தே
துஞ்சிடோம்—இனி—அஞ்சிடோம்
எந்த நாட்டிலும் இந்த அநீதிகள்
ஏற்குமோ—தெய்வம்—பார்க்குமோ!

விஞ்ச்:— சுட்டு வீழ்த்தியே புத்தி வருத்திடச்
சொல்லுவேன்—குத்திக்—கொல்லு
வேன்
தட்டிப் பேசுவோ ருண்டோ—சிறைக்
குள்ளே
தள்ளுவேன்—பழி—கொள்ளுவேன்.



வ.உ.சி.:— சதையைத் துண்டுதுண்டாக்கினும்
உன் எண்ணம்
சாயுமோ—ஜீவன்—ஓயுமோ
இதயத்துள்ளே இலங்கு மஹாசக்தி
ஏகுமோ—நெஞ்சம்—வேகுமோ?

இந்த வகையிலே பல பாடல்கள் பாடினர். வீர உணர்ச்சியைத் தட்டி எழுப்புவதில் இப்பாடல்கள் மிக வும் பயன்பட்டன.

சூரத் காங்கிரசில் ஏற்பட்ட பிளவு அரசுக்குக் கைகொடுத்தது. தீவிர வாதிகளைக் கைதுசெய்து உள்ளே தள்ளுவதில் அரசு தீவிரம் காட்டியது. உள் நாட்டு அரசு பலப்பல அடக்குமுறைச் சட்டங்களை இயற்றியது. அந்தந்த மாநிலங்களின் ஆளுநர்கள் யார் அதிகம் பேரைத் தண்டித்தோம் என்பதில் போட்டி போட்டார்கள்.

சர் பாம்ப்பில்டே புல்லர் என்ற கிழக்கு வங்கங் கவர்னர் சிராஜ குஞ்ச்சில் உள்ள இரண்டு பள்ளிக் கூடங்களின் மாணவர்கள் அனைவரையும் பெயிலாக்கி விடவேண்டும் என்று உத்தரவு போட்டான். இதற்கு வைஸ்ராய் உத்தரவு கிடைக்கவில்லை. எனவே புல்லர் பதவியை ராஜினமா செய்தான்.

வங்காளத்தில் வந்தே மாதரம், சந்த்யா, யுகாந்தர் என்ற பத்திரிகைகளின் மேல் அடக்கு முறைச் சட்டம் பிரயோகிக்கப் பட்டது. வந்தே மாதரம் பத்திரிகையின் ஆசிரியர் அரவிந்த கோஷ்.

சந்த்யா பத்திரிகையின் ஆசிரியர் உபாத்யாயா. அவர் ''அன்னியன் கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்ல நான் தயாரில்லை. கடவுள் சுயராஜ்யத்தின் பொருட்டு என்னிடம் ஒப்படைத்துள்ள புனிதப் பணியை நான் செய்து கொண்டிருக்கிறேன். எனவே வழக்குகளில் நான் பங்கு பெற விரும்பவில்லை'' என்று எழுதிக் கொடுத்துவிட்டார்.

பத்திரிகைச் சட்டம் என்று ஒரு கொடிய சட்டம் இயற்றினார்கள். அதன்படி ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது. அவர் ஏதாவது பத்திரிகை வன்முறையைத் தூண்டுகிறது என்று நினைத்தாலே போதும். அந்தப் பத்திரிகையின் அச்சா பீஸைக் கைப்பற்றிவிடலாம். பல பத்திரிகைகள் இந்தச் சட்டத்தால் ஒடுக்கபப்ட்டன. லண்டன் அரசே இதற்கு எதிர்ப்புத்தெரிவித்ததென்றால் அந்தச் சட்டத்தின் கடுமை புரியும்.

தீவிரவாதிகளைத் தொலைத்துக் கட்டிவிடுவது என்பது அரசின் தீர்மானம். எனவே தலைவர்கள் நாடு கடத்தப் பட்டார்கள்; விசாரணை இன்றிக் கைது செய்யப்பட்டார்கள், மாணவர் இயக்கங்கள் தடை செய்யப்பட்டன, தேசீயப் பள்ளிகளும் சுதேசிக் கடைகளும் பலவந்தமாக மூடப்பட்டன. சொத்துகள் பறிமுதல் செய்யப்பட்டன; பொதுக் கூட்டங்கள் கலைக்கப்பட்டன. பத்திரிகைகள்தான் வன்முறைக்கு மூல காரணம் என்று பத்திரிகைகளின் மீது மிகத் தீவிரமான நடவடிக்கை எடுத்தார்கள்.



1908-ம் ஆண்டை ஒட்டிக் கொடுக்கப்பட்ட தண்டனைகளே பயங்கரமானவை. தமிழ்நாட்டில் மூன்று முக்கியமான தண்டனைகள்.

சிதம்பரம் பிள்ளைக்கும், சுப்பிரமணிய சிவாவுக்கும் ஆறுண்டு தீவாந்திர தண்டனை. 'இந்தியா' பத்திரிகையின் பொம்மை ஆசிரியர் சீனிவாச ஐயங்காருக்கு ஐந்து ஆண்டுகள் தீவாந்திர தண்டனை. ஸ்வராஜ் பத்திரிகையின் ஆசிரியர் சட்டத்தை மீறியதற்காக மன்னிப்புக் கேட்ட பின்னரும் அவருக்கு 9 மாத தண்டனை.

வங்கத்தில் 'வந்தே மாதரம்' 'யுகாந்தர்' பத்திரிகைகள் ஒடுக்கப்பட்டன. மத்திய மாநிலங்களில் 'ஹரி கிஷோர்' என்ற பத்திரிகையின் ஆசிரியருக்கு ஐந்து ஆண்டுகள் கடுங்காவல். அந்தப் பத்திரிகையின் அச்சு இயந்திரம் கைப்பற்றப்பட்டது. எகிப்தில் ஆங்கில அரசின் கல்விக் கொள்கையைத் தாக்கி எழுதியதற்காக ''உர்து-இ-மோல்லா'' என்ற பத்திரிகையின் ஆசிரியருக்கு 500 ரூபாய் அபராதமும், இரண்டாண்டுகள் கடுங்காவல் தண்டனையும், வந்தே மாதரம் பத்திரிகைக்கு ஒரு கட்டுரை எழுதியதற்காக அலிகாரைச்சேர்ந்த ஹோதிலால் வர்மா என்பவருக்கு ஏழாண்டுகள் தீவாந்திரத் தண்டனை. பம்பாயில் ஹிந்து ஸ்வராஜ், விஹாரி, அருணோதயா, கல் என்ற பத்திரிகைகளின் ஆசிரியர்கள் தண்டிக்கப்பட்டார்கள்.

இலண்டனில் உள்ள ஆங்கில அரசால்கூட இதைப் பொறுத்துக்கொள்ள இயலவில்லை. 14-7-1908

அன்று இந்திய மந்திரி மார்லிபிரபு, வைஸ்ராய் மிண்டோவுக்கு எழுதிய ரகசியக் கடிதத்தில்,

''இந்தியாவில் சதிவழக்கு போன்றவற்றில் கொடுக்கப் பெறும் தண்டனைகளை ஆழ்ந்து, மிகக் கவலையோடு கவனித்துக்கொண்டு வருகிறேன். பம்பாயில் கல்லெறிந்தவர்களுக்குப் பன்னிரெண்டு மாதத் தண்டனை என்று இன்று படித்தேன். இது உண்மையிலேயே கொடூரமானது. திருநெல்வேலி — தூத்துக்குடிக்காரர்களுக்குப் போடப்பட்டுள்ள தண்டனைகள்— ஒருவருக்கு ஆயுள் தண்டனை — மற்றவருக்குப் பத்து ஆண்டுகள் — அநியாயமானது, முடிவில் நிற்காது. இந்த மிருகத்தனமான போக்கை நான் எந்த வகையிலும் ஆதரிக்க மாட்டேன். எனவே இந்தத் தவற்றையும் தீங்குகளையும் உடனே சரி செய்ய வேண்டுகிறேன். நான் ஒழுங்கை நிலை நாட்ட வேண்டியது தான். ஆனால் அதி தீவிரமான கொடுமை மூலம் அதைச் செய்ய முடியாது. அப்படிச் செய்தால் அது வெடி குண்டுகளுக்கு வழி வகுக்கும்'' என்று எழுதினார்.

அவர் சொன்னதை இந்திய அரசு அவ்வளவாக எடுத்துக் கொள்ளவில்லை. மார்லி கணித்தபடியே வங்காளத்தில் குதிராம் போஸ் என்ற இளைஞன் கிங்ஸ் போர்ட் என்ற ஜில்லா மாஜிட்ரேட்டை நோக்கிக் குண்டை வீசினான். துரதிர்ஷ்ட வசமாக அக்குண்டு வெடித்து இரண்டு ஆங்கிலப் பெண்கள் மரணமடைந்தார்கள்.



இது போதாதா? இந்திய அரசு தலைவிரித்தாடியது.

ஏற்கனவே குறிக்கப்பட்டபடி 'இந்தியா' பத்திரிகையின் 'ஒப்புக்குச் சப்பாணி' ஆசிரியர் சீனிவாசன் கைது செய்யப்பட்டார். பத்திரிகை அதிபர் கைது செய்யப்பட்டார். இப்படி ஓங்கப்பட்டகை அடுத்தபடி யார் மேல் விழும் என்பது எல்லோருக்குத் தெரிந்திருந்தது. எனவே நண்பர்கள் பாரதியை அணுகி,

''பாரதி இது பத்திரிகைகளுக்குப் போதாத காலம். உங்கள் பாடலால்தான் மக்கள் உரம் பெறுகிறார்கள். வெறும் வாய் கோஷங்கள் போடுபவர்கள் சிறைக்குச் செல்வதாலே வெளியிலே மாற்றங்கள் எதுவும் நிகழ்ந்து விடாது. ஆனால் தாங்கள் சிறைக்குச் சென்றால் எழுச்சி மங்கிப்போகும் உங்கள் எழுச்சிப் பாடல் எங்கள் மூச்சுக்காற்று. எனவே பிரெஞ்சு ஆதிக்கத்தில் உள்ள புதுச்சேரிக்குச் சென்று விடுங்கள். அங்கிருந்து வரும் உங்கள் வீரமுழக்கம் இங்கே எங்களை இயக்கிக் கொண்டிருக்கும்.''

என்று ஆலோசனை கூறினார்கள். ஒரு கவிஞனுக்கு, அதுவும் கவிதையைப் போர் வாளாகக் கையாளும் கவிஞனுக்கு எழுதுவது தடைபட்டால் வாழ்க்கையே நின்றுபோகும். எனவே நண்பர்கள் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டார். சென்னை சைதாப்பேட்டை இரயில் நிலையத்திலிருந்து புதுச்சேரிக்கு இரயில் ஏறினார்.

இரயில் புகையைக் கக்கிக்கொண்டு சென்றது. பாரதியாரின் தேசபக்திக் கனல் புகையைக் கக்க வில்லை, நெருப்புத் துண்டுகளை உமிழ்ந்து கொண்டே சென்றது.

## 13. மும்முனிகள்

"நான் சுதந்திரப் பிரியன்—எனக்கு எஜமான னும் இல்லை, சங்கிலியும் இல்லை. கஷ்ட வாழ்வாய் இருப்பினும் நான் சர்வ சுதந்திரன். யதேச்சையாய் எங்கும் செல்வேன், எதையும் தின்பேன், எதையும் சொல்வேன், எவரோடும் சேர்வேன். பராதீனம் பிராணசங்கடம், ஒருவருடைய ஆக்கினைப்படி வரவோ போகவோ, உண்ணவோ உறங்கவோ மலம் ஜலம் கழிக்கவோ சம்மதித்து இருப்பவன் மகாநீசனாய் இருக்கவேண்டும்."

(ஓநாயும் வீட்டுநாயும்—பாரதி)

புதுச்சேரி ஒரு கடற்கரை நகரம். நெடுக்கும் குறுக்குமாக நீண்ட அழகான வீதிகள் கொண்டது.

"காலை இளம்பரிதி வீசும் கதிர்களிலே
நீலக் கடலோர் நெடுப்பெதிரே சேர்மணிபோல்
மோகனமாம் சோதி பொருந்தி முறைதவரு
வேகத் திரைகளினால் வேதப் பொருள்பாடி
வந்து தழுவும் வளஞ்சார் கரையுடைய
செந்தமிழ்த் தென்புதுவை என்னும் திருநகர்"

என்று புதுச்சேரியைப் பாராட்டுகிறார் பாரதி. அத் தகைய புதுச்சேரியிலே காலடி எடுத்து வைத்தார்



பாரதி. கடன்காரனுக்குப் பயந்து புதுச்சேரியில் பலர் அடைக்கலம் தேடுவது உண்டு. அந்த வகையில் வசை கொண்டிருந்த புதுவைக்கு இசை கொண்டுவந் தவர் பாரதி. தேசபக்தர்களின் புகலிடம் என்னும் புனி தத்தை முதன்முதல் அந்நகர்க்குத் தந்தவர் பாரதி.

பாரதிக்கு சிட்டி குப்புசாமி ஐயங்கார் என்பவர் தன் வீட்டில் தங்க இடங் கொடுத்தார். இரண்டே நாட்கள்தான். போலீசின் கெடுபிடிக்கு அஞ்சி, பார தியை உடனே காலி பண்ணச் சொல்லிவிட்டார். அச் சம் மனிதனை என்னபாடு படுத்தி வைக்கிறது.

பிறகு எப்படியோ குவளைக் கிருஷ்ணமாச்சாரி யார் என்பவரின் உதவியால் பாரதி தங்குவதற்கு இடம் கிடைத்தது.

புதுச்சேரியில் பாரதியின் நடை உடை பாவனை கள், சிலருக்கு விசித்திரமாயிருந்தன. சிலர் பாரதி யிடம் பேசவும் அஞ்சினர். திறந்த வெளிச் சிறையிலே காலந்தள்ளுவதுபோல புதுச்சேரி வாழ்க்கை ஆரம்பத் தில் இருந்தது. அவருடைய புலமை சிறிது சிறிதாக மக்களுக்குத் தெரிய வந்தது. முக்கியமாக ஏழை மக் கள் அவரை அறிந்து கொண்டார்கள்.

பாரதியினுடைய கண்கள் எதையோ தேடித் துழவும் ஆழ்ந்த நோக்குடைய கண்கள். அவருடைய கண்களை அவ்வளவு எளிதாக யாரும் ஏறிட்டுப் பார்த்துவிட முடியாது. கடைசல் பிடித்தது போன்ற அழகான, திரணமான மூக்கு, மேல் நோக்கி நீவிவிடப் பட்ட வீரமீசை. நல்ல உயரம். மாநிறம், நிமிர்ந்த

நடை. அலங்காரமான உடை. இனிமையான குரல். எடைபோடும் நோக்கு. எழுச்சியூட்டும் வாக்கு. 'உள்ளத்தில் உண்மை ஒளி உண்டாயின் வாக்கினிலே ஒளியுண்டாகும்' என்பதைப் போல அவருடைய வாக்கில் ஒளியுண்டாகியிருந்தது. அவரை ஒருமுறைகண்டு விட்டால் அவருடன் பேசிக் கொண்டிருக்க மாட்டோமோ என்று எண்ணும்படி ஆர்வத்தைத் தூண்டி விடும் காந்த சக்தி அவரிடம் இருந்தது. எனவேதான் அவர் தெருவில் இறங்கி நடக்கத் தொடங்கினுல் ஏழை மக்கள் அவரைப் பின்தொடர்ந்தார்கள். அவரோடு பேச விழைந்தனர். யார் அவரை வணங்கினுலும் உடனே பாரதி அப்படியே நின்று இரு கரம் கூப்பிப் பதிலுக்கு வணங்குவார்.

புதுச்சேரிக்கு பாரதி வந்த சில நாட்களிலேயே மண்டையம் சீனிவாஸாசார்யார் புதுச்சேரிக்கு வந்து சேர்ந்தார். 'இந்தியா' பத்திரிகை நடத்துவதற்கு சாதனங்களும் வந்து சேர்ந்தன.

1908-ம் வருடம் அக்டோபர் மாதம் 10-ம் நாள் ''இந்தியா'' மீண்டும் வெளிவரத் தொடங்கியது. 16 பக்கங்கள் கொண்ட வார இதழ் அது. அந்த நாளிலேயே வாசகர்கள் அனுப்பும் செய்திகளுக்கு சன்மானம் கொடுத்திருக்கிருர். பாரதியார் 'இந்தியா' பத்திரிகையில் எழுதிய 'ஸ்ரீகிருஷ்ண ஸ்தோத்திரம்' என்ற பாடல் ஆங்கில அரசின் கவனத்தைக் கவர்ந்தது. பாரதிக்குப் 'பிடிவாரண்டு' தயாராக இருந்தது.



'ஸ்ரீகிருஷ்ண ஸ்தோத்திரம்' என்ற பாடல் ஏன் ஆங்கில அரசின் கண்ணை உறுத்த வேண்டும்! அந்தப் பாடலைப் பார்த்தால் தானுகத் தெரிந்து போகிறது.

''என்று தணியும் இந்தச் சுதந்திர தாகம்
என்று மடியுமெங்கள் அடிமையின் மோகம்
என்றெம தன்னைகை விலங்குகள் போகும்
என்றெம தின்னல்கள் தீர்ந்து பொய்யாகும்
அன்ெருரு பாரதம் ஆக்க வந்தோனே
ஆரியர் வாழ்வினை ஆதரிப்போனே
வென்றி தரும் துணை நின்னரு என்ரே
மெய்யடியோமினும் வாடுதல் நன்ரே.''

அழைப்பது ஸ்ரீகிருஷ்ணனை என்ருலும், வேண்டுவது தேச விடுதலை. எனவேதான் ஆங்கிலேயன் வயிறெரிந்தது.

'இந்தியா' பத்திரிகையை மக்கள் ஒளித்து வைத்துக்கொண்டு படித்தார்கள். அது மக்களிடையே ஒரு விழிப்புணர்ச்சியை ஊட்டியது.

வ.வே.சு. ஐயர் அவர்கள் 'இந்தியா' பத்திரிகையின் இலண்டன் நிருபராகப் பணியாற்றினுர். இலண்டனிலிருந்து அடிக்கடி கடிதம் எழுதுவார். 1909-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 28-ம் தேதி 'இந்தியா' இதழில் கர்ஸான் வைலியைச் சுட்டுக் கொன்ற பயங்கரவாதி மதன்லால் திங்கரா தூக்கில் இடப்பட்டார் என்றும், அதிகாரிகள் அவர் உடலை ஹிந்துமத ஆசாரப்படி எரிக்க உத்தரவு கொடுக்க மறுத்தனர் என்றும்கோபங்

கொண்ட அக்னி பகவான் கிளாஸ்கோ பருத்திச் சாலேயில் புகுந்து இரண்டரை லட்சம் பெறுமான சாமான்களே உண்டு தீர்ந்துவிட்டார் என்றும் அதாவது அவர் மதிப்பில் திங்கராவின் திவ்ய சரீரம் இரண்டரை இலட்சம் பெறுமானது என்று உலகோர் அறிந்து கொள்ளலாமே என்றும் வ.வே.சு. ஐயர் எழுதியிருந்தார்.

பாரதி தீவிரவாதியாக இருந்தாலும் பலாத்காரத்தில் நம்பிக்கை இல்லாதவர். பழி வாங்கும் பகைமை உணர்ச்சி அவர்க்கு அறவே பிடிக்காது.

பகைவனுக் கருள்வாய்—நன்னெஞ்சே
பகைவனுக் கருள்வாய்
புகை நடுவினில் தீயிருப்பதைப்
பூமியிற் கண்டோமே—நன்னெஞ்சே
பகை நடுவினில் அன்புருவான நம்
பரமன் வாழ்கின்ருன்—நன்னெஞ்சே
பரமன் வாழ்கின்ருன்.

என்று பாடிய பாரதி வெடிகுண்டு சித்தாந்தங்களே அறவே வெறுத்தார். எனவே அடுத்த இந்தியா இதழில் நிருபரின் கருத்தைத் தாம் அங்கீகரிக்கவில்லே என அறிவித்து, ''கிளாஸ்கோ பருத்திச் சாலேயில் நெருப்புப் பற்றி அது நஷ்டம் அடைந்து விட்டதால், திங்கரா உயிர்த்தெழுந்து விட்டாரா? நம் பாரத வாசிகளுக்கு அதனுல் என்ன அனுகூலமாய் விட்டது? நாம் ஏன் அதையோர் பழிவாங்குதலேப் போலக் கொள்ள



வேண்டும்? நம் நாட்டில் ஒரு நாளும் கேட்டிருக்க முடியாத வெடிகுண்டு முதலிய பயங்கரமான செயல்கள் அநாகரிகமானவைகள்'' என்று எழுதினுர். மணியாச்சியில் 'ஆஷ்' துரையை வாஞ்சி நாதன் சுட்டுக் கொன்ற முறையையும் பாரதியார் ஏற்றுக் கொள்ளவில்லே.

பாரதியினுடைய பாதை ராஜ பாதை. குறுக்கு வழிகளுக்கு அங்கே இடமில்லே. பாரதியின் பார்வை யானேயின் பார்வை. நேராக, ஆனுல் அதிக அளவு பரந்து படக் காணக்கூடிய பார்வை.

பாரதி 'இந்தியா' பத்திரிகையோடு 'விஜயா' என்ற நாளிதழையும், 'கர்மயோகி' என்ற பத்திரிகையையும் நடத்தி வந்தார்.

'இந்தியா' பத்திரிகையை வாரம் இருமுறை நடத்த வேண்டும் என்று பாரதி திட்டம் தீட்டினுர். அதைப் பத்திரிகையிலும் வெளியிட்டார். என் செய்ய? அரசின் அடக்கு முறை காரணமாக 'இந்தியா' பத்திரிகை 12-3-1910-ல் வெளிவந்த கடைசி இதழோடு நின்று விட்டது. மற்றப் பத்திரிகைகளும் ஓரிரு மாதங்களில் நின்றுவிட்டன. பாரதி தனிமையை உணர்ந்தார். அவர் தனிமையைப் போக்குவதற்காக இறைவனே அனுப்பி வைத்ததைப்போல வ. வே. சு. ஐயரும், அரவிந்தரும் புதுச்சேரி வந்து சேர்ந்தார்கள். மூக்கடலின் சங்கமத்தில் புதுச்சேரி முத்தெடுத்தது.

## 14. அச்சமில்லை, அச்சமில்லை

நெஞ்சு பொறுக்குதில்லையே — இந்த
நிலை கெட்ட மனிதரை நினைந்துவிட்டால்
அஞ்சி யஞ்சிச் சாவார் — இவர்
அஞ்சாத பொருளில்லை அவனியிலே
வஞ்சனைப் பேய்களென்பார் — இந்த
மரத்தில் என்பார், அந்தக் குளத்தில் என்பார்
துஞ்சுது முகட்டில் என்பார் — மிகத்
துயர்ப்படுவார் எண்ணிப் பயப்படுவார் (நெஞ்சு)

கப்பலோட்டிய தமிழன் வ. உ. சிதம்பரம் பிள்ளை சிறைப்பட்ட பிறகு சுதேசிக் கப்பல் கம்பெனி தன்னிடம் கடைசியாக மிகுந்திருந்த 'கோயலண்டோ' என்னும் கப்பல் ஒன்றை வெள்ளையனுக்குச் சொந்தமான பீ. ஐ. எஸ். என். கம்பெனிக்கே விற்றுவிட்டது இதைக் கண்டு பாரதி மனம் பதைத்தார். 'நெஞ்சு பொறுக்குதில்லையே' என்று துடித்தார்.

''ஏதோ ஐம்பதினாயிரம் ரூபாய்க்குவிற்று, இந்தத் தேசத்தின் நஷ்டத்தைப் போக்க இவர்கள் எண்ணிக் கொண்டிருக்கிறார்களோ? மானங் கெட்டவர்கள்! கப்பலைச் சுக்கு சுக்காய் உடைத்துக் கடலில் மிதக்க விடுகிறது தானே! இந்தத் தேசம் தாங்கும், ''மானம் பெரிது, மானம் பெரிது'' என்று கொதித்தார்.

மானம் சிறிதென்றெண்ணி
வாழ்வே பெரிதென்றெண்ணும்



ஈனர்க் குலந்தனில் — கிளியே
இருக்க நிலைமையுண்டோ
சொந்த சகோதரர்கள்
துன்பத்திற் சாதல் கண்டும்
சிந்தை இரங்காரடீ — கிளியே
செம்மை மறந்தாரடீ

என்று கதறினார்.

அச்சம், அச்சம், அச்சம் எங்கு நோக்கினும் அச்சம். அச்சத்தை வெறுத்தார் பாரதி. அச்சம் அவரைக் கண்டு அஞ்சியது. மக்களெல்லாம்

''அஞ்சி அஞ்சிச் சாவார் — இவர்
அஞ்சாத பொருளில்லை அவனியிலே''

என்ற நிலையில் இருந்தார்கள். தெய்வபக்திகூட அச்சத்தின் அடிப்படையிலே விளைந்த பக்தியாகவே இருந்தது.

''எதற்கும் அஞ்சாத தைரியமே உண்மையான தெய்வ பக்திக்கு லக்ஷணம். அஃதில்லாத பக்தி தேங்காய்க்கும் சர்க்கரைப் பொங்கலுக்கும் வீண் செலவு'' என்று சாடினார் பாரதி.

''பயத்தினால் விரோதம் வளர்கிறது, விரோதத்தால் போர் உண்டாகிறது. மனித ஜாதி வீணாக அழிகிறது. எல்லோருக்குமே நஷ்டம் உண்டாகிறது. பரஸ்பரம் பயம் நீங்கவேண்டுமானால் அதற்குப் போர் சரியான மருந்தில்லை. அன்பிருந்தால் பயம் தெளிந்து போகும்'' என்று பயம் நீங்க மருந்தொன்று சொன்னார்.

"பயம் தீர்ந்தால் நேரே பார்க்கலாம்
கவனி
பொய் தீர்ந்தால் பயம் தீரும்
பயம் தீர்ந்தால் பொய் தீரும்

அஞ்சாதவன் தானே நேராகப் பார்க்க முடியும்!

அச்சம் .கொண்டவனைப் பார்க்கவே பாரதிக்குப் பிடிக்கவில்லை.

"கிளிபிடித்த நெஞ்சினாய் போ போ போ
கீழ்மையென்றும் வேண்டுவாய் போ போ போ"

என்று துரத்தி,

"ஒளிபடைத்த கண்ணினாய் வா வா வா
உறுதி கொண்ட நெஞ்சினாய் வா வா வா"

என்று வரவேற்புப் பாடினார்.

மண்டையிலே அடித்துச் சொல்வதுபோல, போர்ப்பரணி முழங்குவது ஒப்ப,

"அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்ப தில்லையே
இச்சகத்துளோ ரெலாம் எதிர்த்து நின்ற
போதிலும்
அச்சமில்லை அச்சமில்லை அச்சமென் பதில்லையே
... ... ... ... ... ... ... ... ... ... ... ...
உச்சிமீது வானிடிந்து வீழுகின் ற போதினும்
அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்ப தில்லையே

என்று முரசு கொட்டினார்.



ஜயமுண்டு பயமில்லை மனமே — இந்த
ஜன்மத்திலே விடுதலையுண்டு நிலையுண்டு (ஜய)

என்ற நம்பிக்கை தீபமேற்றினார்.

"ஜய பேரிகை கொட்டடா—கொட்டடா
ஜய பேரிகை கொட்டடா
பயமெனும் பேய்தனை அடித்தோம்—பொய்மைப்
பாம்பைப் பிளந்துயிரைக் குடித்தோம்"

என வீறு கொண்டார்.

அச்சமும் பேடிமையும், அடிமைச் சிறுமதியும் உச்சத்திற் கொண்டிருந்த ஊமைச் சனங்களைப் பார்த்து,

"அச்சத்தை வேட்கைதனை அழித்துவிட்டால்
அப்போது சாவுமங்கே அழித்து போகும்"

எனப் பேசினார்.

மணக்குள விநாயகரிடம் வேண்டும்போது,
'அச்சம் வேண்டிலேன், அமைதி வேண்டினேன்'
என்றும்'

'பான்மை தவறி நடுங்காதே' பயத்தா லேதும்
பயனில்லை'
'ஆன்மா வான கணபதியின் அருளுண்டு அச்சம்
இல்லையே'

என்றும்,

'அச்சமில்லை; அமுங்குதலில்லை
நடுங்குதல் இல்லை நாணுதல் இல்லை
ஏது நேரினும் இடர்ப்பட மாட்டோம்,

பா—5

அண்டஞ் சிதறினல் அஞ்ச மாட்டோம்
கடல் பொங்கி எழுந்தால் கலங்க மாட்டோம்
யார்க்கும் அஞ்சோம், எதற்கும் அஞ்சோம்
எங்கும் அஞ்சோம், எப்பொழுதும் அஞ்சோம்'

என்றும் தீரத்துடன் பாடுகிருர்.

பெரியவர்களுக்குச் சொல்லிச் சொல்லி அலுத்துப் போய், குழந்தைகளேப் பார்த்துப் பேசுகிருர்.

''அச்சர் தவிர்' 'சாவதற்கு அஞ்சேல்'
'தொன்மைக் கஞ்சேல்' 'கீழோர்க் கஞ்சேல்'
'தீயோர்க் கஞ்சேல்' 'பேய்களுக் கஞ்சேல்'

அது மட்டுமல்ல,

'பாதகம் செய்பவரைக் கண்டால்—நாம்
பயம்கொள்ள லாகாது பாப்பா''

என்று தெளிவான வாழ்வின் வழியைப் போதிக்கிருர். பயமின்றி வாழ்ந்த பாரதிகூட வியாதியைக் கண்டால் அஞ்சுவது உண்டு. அதையும் மீறும் துணிவு பெற வேண்டும் என்று விழைந்தார்.

''ஓயாமல் வியாதி பயம்கொண்டு உளேகின்ற
நெஞ்சமே!
தூ, தூ, தூ, கோழை''

என்று தன் மனத்தையே தான் கடிந்து கொள்கிருர். அதன் விளேவாக, காலனே அழைத்து,



''காலா உன்னேச் சிறு புல்லென மதிக்கின்றேன்—
என்றன்
காலருகே வாடா உன்னேச் சற்றே மிதிக்கின்
றேன்''

என்று பேசும் துணிவு வந்து விடுகிறது.

அந்தத் துணிச்சல்தான், திருவனந்தபுரம் மிருகக் காட்சி சாலேயில் சிங்கத்தைக் கையால் தடவி தட்டிக் கொடுக்கச் செய்தது.

அந்தத் துணிச்சல்தான்,

''தின்னவரும் புலி தன்னேயும் அன்பொடு
சிந்தையிற் போற்றிடுவாய்''

என்று பேச வைத்தது.

## 15 தமிழின் மறுமலர்ச்சி

''ஒருவகைப்பட்ட காலசகம் முடிவு பெற்ற போதிலும்
ஒருவகையான கலாசகம் வருந்தறுவாயிலும்''
உண்மையான கலேத்திகழ்ச்சி ஏற்படுகின்றது''

—இத்தாலிய ஞானி மெஸீனி

(மொழிபெயர்ப்பு—பாரதி)

பாரதியின் தோற்றம் தமிழில் ஒருபுதிய காலசகத்தின் வரவைக் கொணர்ந்தது. அதன் விளேவாக உண்மையாக கலேத்திகழ்ச்சி நிகழ்த்தது. பாரதி தொடாத பொருளில்லே. அவர் பேசாத கலேயில்லே. சங்கீதம், நாட்டியம்' கவிதை, கல்வி என்று எல்லாப்

பொருட்களையும் தனது குறுகிய வாழ்க்கையில் பேசி தீர்த்த மகாகவி பாரதி. பாரதியால் தமிழ் புது மலர்ச்சி கண்டது. பாரதியின் தமிழ் ஆர்வத்தை அறிய வேண்டுமென்ருல், அவர் திரு. நெல்லையப்பபிள்ளைக்கு எழுதிய கடிதம் ஒன்றே போதும்.

"தமிழ், தமிழ், தமிழ்—என்று எப்போதும் தமிழை வளர்ப்பதே கடமையாகக் கொள்க. ஆனல் புதிய புதிய செய்தி, புதிய புதிய யோசனை, புதிய புதிய உண்மை, புதிய புதிய இன்பம் தமிழில் ஏறிக் கெண்டே போக வேண்டும். 'தம்பீ, நான் ஏது செய் வேனடா!

தமிழைவிட மற்ருெரு பாஷை சுகமாக இருப் பதைப் பார்க்கும்போது எனக்கு வருத்தம் உண்டா கிறது. தமிழைவிட மற்ருெரு ஜாதியான் அறிவிலும் வலிவிலும் உயர்ந்திருப்பது எனக்கு சம்மதமில்லை. தமிழச்சியைக் காட்டிலும் மற்ருெரு ஜாதிக்காரி அழகா யிருப்பதைக் கண்டால் என் மனம் புண்படுகிறது.

தம்பி, தமிழ்நாடு வாழ்க என்றெழுது. தமிழ் நாட் டில் நோய்கள் தீர்க என்றெழுது, தமிழ் நாட்டில் வீதி தோறும் தமிழ்ப் பள்ளிக் கூடங்கள் மலிக என்றெழுது.

அந்தத் தமிழ்ப் பள்ளிக் கூடங்களிலே நவீன— கலைகளெல்லாம் பயிற்சி பெற்று வளர்க என்று எழுது.

தொழில்கள், தொழில்கள், தொழில்கள் என்று கூவு. வியாபாரம் வளர்க, எந்திரங்கள் பெருகுக. முயற்சிகள் ஓங்குக, சங்கீதம், சிற்பம், யந்திர நூல், பூமிநூல், வானநூல், இயற்கை நூலின் ஆயிரம் கிளை



கள் இவை தமிழ் நாட்டிலே மலிந்திடுக என்று முழங்கு.'

பாரதி பள்ளிகளிலே எவ்வாறு பாடம் கற்றுக் கொடுக்க வேண்டும் என்பதற்குப் பாடத்திட்டம் கூட வகுத்துக் கொடுத்துள்ளார்.

"நெல் எப்படி விளைகிறது?" என்பதைக் கற்றுக் கொடுக்காமல் "அன்மொழித்தொகையாவது யாது?" என்று படிப்புச் சொல்லிக் கொடுப்பதை நினைக்கும் போது சிரிப்புண்டாகிறது. அன்மொழித் தொகை சில ரைக் காப்பாற்றும். ஊர் முழுதையும் காப்பாற்ருது. நெல்தான் ஊர் முழுவதையும் காப்பாற்றும். அன் மொழித் தொகையைத் தள்ளிவிட வேண்டுமென்று நான் சொல்லவில்லை. ஆனல் அன்மொழித் தொகை யைப் பயிர் செய்து நெல்லை மறந்து விடுவது சரியான படிப்பில்லையென்று சொல்கிறேன். அவ்வளவுதான்."

பாரதி பாடல்கள் மட்டும் புதியனவல்ல. பாரதி யின் சிந்தனைகளும் புதியவை.

பாரதியால்தான் பெண்களுக்கு சமஉரிமை விரை வில் கிடைத்தது. பெண்விடுதலையைப் பற்றிப் பாரதி யைப் போல் வேறு எந்தக் கவிஞனும் பாடியதில்லை. பெண்கள் சங்கமொன்று புதுவையில் தொடங்கி தன் வீட்டிலேயே கூட்டங்கள் நடத்தினர். அப்படி ஒரு கூட்டத்தில் பாரதியாரின் புதல்வி தங்கம்மாள் பாரதியால் படிக்கப்பட்ட கட்டுரை மிக ரசமானது.

'ஒரு ஸ்திரீயானவள் ஸாத்வீக எதிர்ப்புமுறையை அனுசரிக்க விரும்பினால் தனது கணவனிடம் சொல்லத்தக்கது யாதெனில்,

"நான் எல்லா வகைகளிலும் உனக்குச் சமமாக வாழ்வதில் உனக்குச் சம்மதம் உண்டானால் உன்னோடு வாழ்வேன். இல்லாவிட்டால் இன்று இராத்திரி சமையல் செய்ய மாட்டேன். எனக்கு வேண்டியதைப் பண்ணித் தின்று கொண்டிருப்பேன். உனக்குச் சோறு போட மாட்டேன். நீ அடித்து வெளியே தள்ளினால் ரெஸ்தாவில் கிடந்து சாவேன். இந்த வீடு என்னுடையது, இதை விட்டு வெளியேறவும் மாட்டேன்" என்று கண்டிப்பாகச் சொல்லிவிடவேண்டும்.

பெண்கள் விடுதலைக்காகப் பாரதி எவ்வளவு தீவிரமாகப் போராடினார் என்பதற்கு மேலே கூறியது சான்று.

"மாட்டை அடித்து வசக்கித் தொழுவத்தில்
மாட்டும் வழக்கத்தைக் கொண்டு வந்தே
வீட்டினில் எம்மிடம் காட்ட வந்தார் அதை
வெட்டி விட்டோம் என்று கும்மியடி

என்றும்

பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்
பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்
எட்டும் அறிவினில் ஆணுக்கிங்கே பெண்
இளைப்பில்லைகாண் என்று கும்மியடி"

என்று பாடி பெண்களுக்கு விடுதலை உணர்ச்சியைத் தூண்டினார். இன்று பலப்பல உரிமை பெற்றுத்திகழும்



பெண்கள் பாரதியிடம் நன்றி பாராட்டும் கடப்பாடு உடையவர்கள்.

## 16. ஊண்மிக விரும்பு

**இனியொரு விதிசெய்வோம்—அதை**
**எந்த நாளும் காப்போம்**
**தனியொருவனுக்கு உணவில்லையெனில்**
**ஜகத்தினை அழித்திடுவோம்**

1916ம் வருடம், ஜனவரிமாதம் 19ம் தேதி பாரதியார் சுதேசமித்திரனில் ஒரு கட்டுரை எழுதினார். அதில் ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிடுகின்றார்.

ஆஸ்திரேலியா தேசத்துப் பெண் பள்ளிக்கூடம் ஒன்றில் வாசித்துக் கொண்டிருந்த ஒரு ஆஸ்திரேலியப் பெண்ணை இன்ஸ்பெக்டர் வந்து பரீக்ஷை நடத்தியபோது பின்வரும் கேள்வி கேட்டாராம்,

இந்தியா தேசத்து ஜனங்களின் சாதாரண போஜனம்எது? அந்தப்பெண் சொல்லிய மறுமொழி—பஞ்சம்.

பதிலைக் கேட்பதற்கு வேடிக்கையாக இருக்கிறது. ஆனால் அது வெறும் வேடிக்கைதானா? அன்றைய நிலையில் பாதி வயிற்றுக்கும் சோறின்றி மக்கள் பரிதாபமான நிலையில் இருந்தார்கள். அளவுக்கு மேல் வேலை வாங்கி அடிவயிற்றில் அடித்த நிலையும் அன்றிருந்தது. சிறு சிறு பையன்களையும் பெண்களையும் கூட வேலை வாங்கினார்கள். அதே சமயம் பலர் வேலை

யின்றி இருந்தார்கள். மக்கள் நலனையே கருத்தில் கொண்டிருக்கும் பாரதிக்கு இத்தகைய நிலைமை வருத்தத்தைக் கொடுத்தது.

"ஏழைகளிடம் ஊர்ப்பொது நன்மைக்கும் அபிவிருத்திக்கும் உரிய சகலவித வேலைகளும் வாங்கிக் கொண்டு, அதற்குக் கைம்மாருக ஒருயிர் மிச்சமில்லாமல் அத்தனை ஏழைகளுக்கும் தகுந்த ஆகாரம் கொடுத்துவிட வேண்டுமென்றும் சட்டம் செய்துவிட்டால் போதும். ஒருயிரேனும், ஒரு போதேனும் சோறின்றி இளைக்க ராஜாங்கம் இடங்கொடாதென்ற உறுதிப்பாடு ஏற்பட்டுவிடும். அடே அப்பா, பசிப்பயம் ஒன்று மாத்திரம் நீங்கிவிட்டால் மனித ஜாதி என்ன மேன்மையடைந்து நிற்கும்! இங்ஙனம், சமாதான முறையில் இந்த பசித் தொல்லையை இந்தியா மாற்றிவிட்டிருப்பதைக் கண்முன்னே காணில் மற்ற உலகத்து நாடுகளும் இந்த அறநெறியைப் பின்பற்றி ஒழுகும். இதற்கு ஸ்வராஜ்யம் வேண்டும்" என்று எழுதினர்.

வேலையில்லாத் திண்டாட்டம் அன்றே நாட்டில் தலைவிரித்தாடியிருந்தது. அதைக் கண்டு மனம் வெம்பினர்.

"இங்கிலீஷ் படித்தவர்களுக்குள்ளே குறைவாகவும், அதாவது ஆயிரக்கணக்காவும், இங்கிலீஷ் படிப்பில்லாதவர்களுக்குள்ளே மிகுதியாகவும் அதாவது லக்ஷக்கணக்காகவும் யாதேனும் தொழில் செய்து பிழைக்க வேண்டும் என்ற ஆவலும் தொழில் செய்யும் திறமையும் உடையோராயினும் தொழிலகப்படாமல்



வறுமைப் பிசாசினுல் கிழிப்புண்டு மடிகிருர்கள். ஏனென்று கேட்பாரில்லை. ராஜாங்கத்தார் இந்த விஷயத்தை ஸ்மரிக்கவே இல்லை. ராஜாக்கள், ஜமீன்தார்கள், பிரபுக்கள் இதைக் கருதவில்லை. மடாதிபதிகள், தர்மகர்த்தாக்கள் இதனை ஸ்மரிக்கவில்லை. ஜனத் தலைவர்கள், ராஜ்யதந்திரிகள் இதைக் கருதவில்லை. உபந்யாசகர்களும், பத்திராதிபர்களும், உபாத்தியாயர்களும் இதைப் புறக்கணித்து விடுகிருர்கள். இந்தியாவிலே பசியால் மடிவோரைப்பார்த்திரங்குவாரில்லையா? தெய்வமில்லையா' என ஏங்கினர். அந்த ஏக்கந்தான்

"தனியொருவனுக்கு உணவில்லையெனில்
ஜகத்தினை அழித்திடுவோம்"

என்ற பாடலாகப் பரிணமித்தது.

இந்த நிலை எய்துவதற்கு உழைக்க வேண்டும். வேலையிருந்தும் உழைக்காமல் சோம்பேறியாக இருப்பவர்களைக் கண்டால் பாரதிக்கு வெறுப்பு. எனவே சோம்பலைப் பற்றிப் பல அறிஞர்கள் சொன்ன கருத்துக்களையெல்லாம் தொகுத்துக் கட்டுரையாக எழுதினர்.

"தொழிலாளியின் கை, தொழில் செய்யும்போது பரிசுத்தமாகிறது. சோம்பேறியின் மனவிருப்பம் அவனையே கொல்கிறது. தொழில் எத்தனை அசுசியாக இருந்தாலும் அதைச் செய்வதில் அவமானமில்லை. சோம்பலொன்றுதான் அவமானம். சோம்பல் ஒரு குற்றம். தொழிலின்றி வாழ்தல் மலம். உடம்பை சோம்பலுக்கும் சொகுசுக்கும் இரையாக்கி வைத்திருப்

பவனை ஞானியாகக் கொள்ளலாகாது. சந்தேகம், விசனம், மனச்சோர்வு, கோபம், ஏக்கம் இந்தப் பிசாசுகளெல்லாம் மனிதனை அறுக்கும் பொருட்டுப் பதுங்கி நிற்கின்றன. அவன் சோம்பலுக்கு இடம் கொடுக்கும்போது இவையெல்லாம் அவனை வந்து தாக்குகின்றன. தீவிரமாக உடம்பை உழைப்பதே இந்தப் பிசாசுகள் அடிக்காமல் தன்னைக் காத்துக் கொள்வதற்கான நிச்சயமான வழி. தொழிலைக் கைக் கொண்டால், பிறகு எந்தப் பிசாசும் பக்கத்தில் நெருங் காது. மிஞ்சி வந்தால் தூரத்திலிருந்து உறுமும். அவ் வளவுதான்'' என்று தொகுத்துக் கொடுத்தார்.

இந்தியாவில் பலர் நோஞ்சான்களாக இருந்தது பாரதிக்குப் பிடிக்கவில்லை. இப்படி நோஞ்சான்களாக இருப்பவர்களைப் பார்த்து உணவைக் குறைக்கும்படி உபதேசம் செய்வதை வெறுத்தார்.

''உணவு மிகுதியால் நோய்ப்படும் கூட்டத்தார் நம்மிடம் இல்லை. உணவுக் குறைதான் இங்கே இருக் கும் சங்கடம். ஊண் மிகுதியால் உண்டாகும் நோய் களைக் காட்டிலும் ஊண் குறைவால் உண்டாகும் நோய்களே மிகவும் கொடியன. ஊண் மிகுதிக்கு இயற்கையிலே மாற்றுண்டு. ஊண் குறைவிற்கு மரணந்தான் மாற்று'' எனவேதான் புதிய ஆத்தி சூடியில்

''ஊண் மிக விரும்பு'' என்று பாடினார்.

''சோம்பேறியாக ஒருவன் நிறையப் பணத்தைக் குவித்து வைத்துக்கொண்டு அக்கம் பக்கத்து ஜனங் கள் பட்டினி கிடந்து சாவதைப் பார்த்துக் கொண்டி ருப்பது கொடிய பாவம். நமது நாட்டுச் செல்வர்கள் இவ்விஷயத்தைக் கவனிக்க வேண்டும். உன் சொத்தை எல்லாருக்கும் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு, நீ ஏழையாக வேண்டுமென்று நான் சொல்லவில்லை. கைத் தொழில்களும் வியாபாரங்களும் ஏற்படுத்தி அக்கம் பக்கத்தாரிடம் சரியானபடி வேலை வாங்கிக் கொண்டு சரியானபடி கூலி கொடு. உனக்கும் நல்ல லாபம் கிடைக்கும். கூலியைக் குறையக் கொடுக்கும். முதலாளி லக்ஷ்மி தேவியைக் காலால் உதைக்கிறான். அவன் மகன் தரித்திரத்திலும் நோயிலும் வருந்து வான். ஸகல ஜனங்களுக்கும் வயிறு நிறைய உணவு கிடைக்காத ஊரில் வாழும் செல்வந்தர்களெல்லாம் திருடர், அங்கே குருக்களெல்லாம் பொய்யர். பண்டி தரெல்லாம் மூடர். மேன்மை நிலை பெறவேண்டு மானால் கைத்தொழில்கள் பெருகும்படி செய்யவேண் டும். சாத்தியமில்லையென்று சொல்லி ஏங்குவதிலே பயனில்லை. எப்படியேனும் எப்படியேனும் எப்படி யேனும் செல்வத்தை வளர்க்க வேண்டும்''



என்று எழுதினார். மிகச்சிறந்த சமூக சீர்த்திருத்த வாதியாக விளங்கினார்.

## 17. வல்லமை தாராயோ?

...பராசக்தி ஏழையேன் கவிதை யாவும் தனக் கெனக் கேட்கிறாள்.

"சக்தி தாசன்" எனத் தன்னைக் கூறிக் கொள்வதில் பாரதிக்கு மகிழ்ச்சி. தனது கவிதைகளை யெல்லாம் பராசக்தி தனக்கென்றே கேட்கிறாள் என்கிறார். அவள் சொல்லினுக்கு எளிதாகவும் நிற்பதில்லை. சொல்லை வேறிடத்திற்குச் செலுத்தவும் வழிவிடுவதில்லை. எனவே தேவையானதை எல்லாம் பராசக்தியிடம் வேண்டிக் கேட்டுக் கொள்கிறார்.

பாரதிக்குத் தன் அறிவில் அபார நம்பிக்கை. பராசக்தி தனக்கு நிரம்பவே அறிவைக் கொடுத்திருக்கிறாள் என்பதை மனப் பூர்வமாக உணர்ந்தார். பல இடங்களில் அதைச் சுட்டிக் காட்டுகிறார். ஆனால் அறிவைக்கொண்டு நல்லவை செய்யும் ஆற்றல் தரவில்லையே என வருந்தினார். அவர் தனக்கென கேட்கவில்லை. வையம் வாழ்வுக்காக வரம் வேண்டினார்.

"நல்லதோர் வீணை செய்தே — அதை
நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ?
சொல்லடி சிவசக்தி! — எனைச்
சுடர் மிகும் அறிவுடன் படைத்துவிட்டாய்,
வல்லமை தாராயோ — இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே!"

அவர் தனக்கெனக் கேட்பது காணி நிலம். அதுவும் அந்தக் காணி நிலத்தில் மாளிகை கட்டி, பராசக்தி காவல் நிற்க, வையம் வாழப் பாட வேண்டும் என்ற ஆசையால்தான் கேட்கிறார்.



"காட்டு வெளியினிலே — அம்மா, நின்றன்
காவலுறவேணும் — என்றன்
பாட்டுத் திறத்தாலே — இவ்வையத்தைப்
பாலிடத்திட வேணும்"

இதுதான் அவர் வேண்டுகோள்.

தேடிச் சோறு நிதம் தின்று—பல
சின்னஞ் சிறு கதைகள் பேசி—மனம்
வாடித் துன்பமிக உழன்று—பிறர்
வாடப் பலசெயல்கள் செய்து—நரை
கூடிக் கிழப் பருவம் எய்தி—கொடுங்
கூற்றுக் கிரையெனப்பின் மாயும்—பல
வேடிக்கை மனிதரைப் போல—நான்
வீழ்வேன் என்று நினைத்தாயோ?"

என்று சக்திக்கே சவால் விடுகிறார்.

உன்னைக் கோடி முறை தொழுதேன்—இனி
வையத் தலைமையெனக் கருள்வாய்"

என வேண்டுகிறார்.

## 18. அவன் அமரன்

பாரதியார் புதுச்சேரியில் இருந்த போதுதான் அவருடைய பாட்டுத் தோட்டம் பூத்துக் குலுங்கி காய்த்துக் கனிந்தது.

வறுமை, ஏமாற்றம், அரசுக் கண்காணிப்பு, போலீஸ் தொல்லை, தின்னும் கவலை, சுதந்திர தாகம்,

மக்களின் போக்கைக் கண்டு கொதிப்பு, இவற்றிற் கெல்லாம் இடையில் புதுச்சேரியில் கவிதை முகிழ்த் தது. காவியங்கள் தோன்றின.

நெருங்கிய உறவுகளில் கண்ணனைக் கண்டு கவிதைக் கனியைப் பிழிந்து தந்த "கண்ணன் பாட்டு", நெட்டை மரங்களென நின்று புலம்பிக் கொண்டிருந்த மக்களின் பெட்டைப் புலம்பல் தீர, எழுச்சி ஊட்டுவதற்காகப் பாமரர்களும் புரிந்து கொள்ளும் வண்ணம் நெஞ்சைப் பிழிந்து உயிரேற்றிக் கொடுத்த 'பாஞ்சாலி சபதம்', கவிதை என்றால் என்ன என்பதை படிக்கும் போதே உணர வைக்கும் கற்பனைக் களஞ்சியமாய் 'பட்டப் பகலிலே பாவலர்க் குத் தோன்றுவதாம் நெட்டைக் கனவின் நிகழ்ச்சி யாக மீள விழியில் மிதந்த கவிதையாக', இந்தப் பாட்டினைப் போல் ஆச்சரியம் பாரின் மிசை இல்லை என்று சொல்லும் வகையில் எழுந்த 'குயில் பாட்டு' அழகு தெய்வத்தின் ஆராதனை, காளி சக்தியின் 'ஊழிக் கூத்து' என்றெல்லாம் பாடல்களைப் பயிர் செய்த கவிதைப்பண்ணையாகப் புதுச்சேரி திகழ்ந்தது.

கோரத் தாண்டவம் புரிந்து கொள்ளை கொண்ட புயற்காற்றில் வீழ்ந்து படா வண்ணம் பாரதியையும் பாரதி குடும்பத்தையும் காத்தாள் பராசக்தி.

பாரதிக்குப் புதுச்சேரியும் கசந்தது. இந்திய மண் அழைத்தது. மனைவியின் வற்புறுத்தலும் சேரவே 1918—ம் ஆண்டு புதுச்சேரியை விட்டு வெளியே வந் தார். ஆங்கில அரசு அவரை வில்லியனூருக்கு



அருகே கைதுசெய்து கடலூரிலே சிறையில் வைத் தது. சில நண்பர்களின் உதவியால் சிறையினின்றும் விடுதலை பெற்றுக் கடையம் சென்றார். கடையத்திலே அவர் கருத்துக்களையும் கொள்கைகளையும் ஜீரணிப்ப வர்கள் இல்லை. ஒதுக்கி வைத்தார்கள்.

தனது நூல்களையெல்லாம் தானே பதிப்பிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார். தீப்பெட்டிகளைப் போல தனது நூல்கள் விற்பனை செய்யப்படவேண்டும் என்று கனவு கண்டார்.

கடையத்தை விட்டு மீண்டும் சென்னை வந்து சுதேசமித்திரனில் உதவி ஆசிரியராகச் சேர்ந்தார்.

அவருடைய தேசப்பணி இடையறாது தொடர்ந் தது. பாரத நாட்டை வாழ்த்திப் பல பாடல்கள் பாடி னார். கடற்கரையிலே கூட்டம் போட்டு மக்களுக்குத் தேசபக்தியை ஊட்டினார். காந்தியைக் கண்டார். வெறும் மிஸ்டர். காந்தியாக, அப்பொழுது இருந்த வரை, 'மஹாத்மா' என்று வாழ்த்தினார்.

அவருடைய வீடு திருவல்லிக்கேணி துளசிங்கப் பெருமாள் கோவில் தெருவில் பார்த்தசாரதி சுவாமி கோயிலுக்கு அருகில் இருந்தது.

அரவிந்தர் தொடர்பும், புதுச்சேரியில் அவரை ஆட்கொண்ட பல துறவிகளின் உறவும் பாரதியிடம் ஒரு புதிய உணர்வைத் தோற்றுவித்திருந்தன.

பார்த்தனைப் போலத் தன்னை ஆக்க வேண்டும் என்று கண்ணனிடம் வேண்டிய பாரதிக்கு, 'வாசமிகு துழாய்த்தாரான், கண்ணடி மறவாத மனத்தினனாக

இருந்த பாரதிக்கு, பார்த்தனுக்குத் தேரோட்டிய கண்ணன், பார்த்தசாரதியின் பேரில் ஈடுபாடு ஏற்பட்டது அதிசயமில்லை. பார்த்தசாரதியின் கோவிலுக்குத் தினமும் காலையிலே சென்று வந்தார்.

கோயில் யானை பாரதியின் நண்பன். அதற்குப் பழம் கொடுப்பார். அது உண்பதைக் கண்டு மகிழ்வார். சிட்டுக்குருவிக்கு அரிசியைத் தூக்கிப் போட்டு அது தின்பதைக் கண்டு வியப்புறும் பாரதி, யானை பழம் உண்பதைக் கண்டு சிறுகுழந்தையைப் போலக் குதிப்பார்.

''காக்கை குருவி எங்கள் ஜாதி—நீள்
கடலும் மலையும் எங்கள் கூட்டம்
நோக்கும் திசையெலாம் நாமன்றி வேறில்லை
நோக்க நோக்கக் களியாட்டம்''

என்ற உணர்வோடு ஒருநாள் காலை பழம்கொண்டு யானையை நெருங்கியபோது யானை அவரைத் தூக்கிப் போட்டு விட்டது. புதுச்சேரியில் பாரதிக்கு உற்ற துணையாக இருந்த குவளைக் கண்ணன் அப்பொழுது பார்த்தசாரதி சுவாமி கோவிலில் பணிபுரிந்து கொண்டிருந்தார். பாரதியை யானை தூக்கிப் போட்டுவிட்டதைக் கண்டு பாய்ந்து ஓடினார். தன் உயிரையும் திரணமாக மதித்து யானையிடமிருந்து பாரதியை மீட்டுக் கொணர்ந்தார்.

பாரதியின் உடம்பில் ஏற்பட்ட ஊமைக் காயங்கள் ஆறப் பல நாட்கள் ஆயின. மீண்டும் சுதேசமித்திரனில் பணியாற்றிக் கொண்டிருந்தார்.

உடல்நலமின்றி இருந்த பாரதி, 'மரணமிலாப் பெரு வாழ்வைப் பற்றித் தீவிரமாகச் சிந்தித்தார்.



ஈரோட்டிலே அவரைப் பேசுவதற்காக அழைத்திருந்தார்கள். ஈரோட்டில், கருங்கல் பாளையம் என்ற கிராமத்தில் அங்குள்ள வாசக சாலையின் ஆண்டு விழாக் கூட்டத்தில் பேசினார்.

1921-ம் வருடம் ஆகஸ்டு மாதம் 4-ம் தேதி அதைப் பற்றி பாரதி எழுதியிருக்கிறார்.

''எனக்கு ஒரு விஷயம்தான் முக்கியமாகத் தெரியும். அதையே அங்கும் எடுத்துப் பேசினேன். அதாவது இந்த உலகத்தில் மானுடர் எக்காலத்திலும் மரணமில்லாமல் இருக்கக் கூடுமென்ற விஷயம்.''

''மரணமில்லாமல் இருக்கக் கூடும்'' என்று பேசிய அந்த மகாகவி, சென்னை திரும்பியதும் நோய் வாய்ப்பட்டார். வயிற்றுக் கடுப்பால் அவதிப்பட்டார். டாக்டரிடம் மருந்துசாப்பிடுவதற்கும் மறுத்துவிட்டார். அடிக்கடி, 'நாராயண, நாராயண' என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

1921-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 11-ம் தேதி இரவு 1-30 மணிக்கு, சரியாகச் சொன்னால் செப்டம்பர் 12-தேதி காலை 1-30 மணிக்கு 'மரணமில்லாப் பெருவாழ்வு' நிலைக்கு உயர்ந்தார் மகாகவி.

பாரதி கூறியதுபோல, அவருக்கு மரணமே இல்லை. சொல்லாக, சொல்லின் ஜீவனாக இந்த மண்ணில் அவர் உலாவிக் கொண்டே இருப்பார். பாரதம் உள்ளவரை பாரதியும் உண்டு. அந்த மரணமில்லா மகாகவிக்குப் பல்லாண்டு பாடுவது இந்த நூற்றாண்டு நேரத்தில் பொருத்தமாக இருக்கும். எனவே மகாகவிக்குப் 'பல்லாண்டு' பாடுகிறேன்.

## பல்லாண்டு வாழியே

பல்லாண்டு பல்லாண்டு பல்லாண்டு வாழி
பாரதியார் திருநாமம் பல்லாண்டு வாழி
சொல்லாண்டு சொல்மாலை சூட்டியவன் வாழி
சொல்லுக்குள் உயிர்ச்சக்தி தூவியவன் வாழி
வில்லாண்ட விஜயர்க்குச் சாரதியைப் போற்றி
விதவிதமாய்க் கவிசொன்ன வேந்தனவன் வாழி
கல்லாண்ட நெஞ்சினையும் கனிவிக்கும் வண்ணம்
கவியாண்ட பாரதியார் திருநாமம் வாழி!

நெல்லை மாவட்டத்தில் இளசைநகர் தன்னில்
நிறையாயிரத் தொண்ணூற்றெண்பத்தி ரெண்டில்
நல்லகுளிர் டிசம்பரிலே பதினொன்றும் தேதி
நல்லவதாரம் செய்த நம்கவிஞன் வாழி
தொல்லையென வந்திட வெள்ளையரை ஓட்ட
சொல்முரசம் கொட்டியநம் சுப்ரமண்யன் வாழி
புல்லர்களை வஞ்சகரைச் சாடியவன் வாழி
புது ஆத்தி சூடிதனைப் பாடியவன் வாழி
கண்ணனையே சேவகனாய் ஆண்டானாய் குருவாய்
காதலனாய் காதலியாய் தாய்தந்தை அரசாய்
திண்ணமுறும் நற்சீடன் குழந்தையாய் தேவாய்
தீராத விளையாட்டுப் பிள்ளையாய்ப் போற்றி
பண்ணமைந்த கண்ணன் பாட்டியற்றியவன் வாழி
பாஞ்சாலி சபதத்தைப் பாடியவன் வாழி
எண்ணமுயர் குயில்பாட்டை இசைத்தகவி வாழி
எண்ணறிய 'அறுபத்தாறு ஈந்தகவி வாழி



பல்லுடைக்கும் சொல்மாற்றி, பாரதமா தாமேல்
பள்ளியெழுச் சிதசாங்கம், நவரத்ன மாலை
வில்லெடுக்கும் குறவள்ளி வேலன் புகழ்பாட்டு
விநாயகர் நான்மணிமாலை வேதாந்தப் பாட்டு
சொல்படிக்கும் குழந்தைக்கும் சுந்தரமாய்ப்பாட்டு
சுதந்திரத்தைக் கண்டதுவாய் துள்ளிய தேன்பாட்டு
மெல்லியலார் விடுதலையை வேண்டுகிற பாட்டு
வித்தகமாய்ச் சுயசரிதை பாடியவன் வாழி!

கார்த்திகை மூலத்துதித்த கவியேறு வாழி
காற்று, கள், தீ, வானைக் கவிசேர்த்தான் வாழி
ஆர்த்தெழுந்து விடுதலையைப் பாடியவன் வாழி
அச்சமில்லை எனப் பயத்தை அதட்டியவன் வாழி
சீர்த்திமிகு தோத்திரங்கள் செய்த கவி வாழி
தேசத்தைத் துயில் நீக்கப் பாடியவன் வாழி
வார்த்தைக்கு வார்த்தை உயிர் ஏற்றியவன் வாழி
மகாசக்தி புகழ்பாடும் மகாகவிஞன் வாழி

காலனையும் புல்லெனவே கவிசொன்னான் வாழி
காந்தியினை வாழ்கவெனப் பாடியவன் வாழி
சீலமுறும் அழகுதெய்வம் தெரிசித்தான் வாழி
தேமதுரத் தமிழோசைப் பாடியவன் வாழி
சாலவேநற் தொண்டுசெய்த சான்றோரைப் போற்றி
தமிழின்பக் கவிதைபல சாதித்தான் வாழி
நூலுயர்வுக் கீதையினை மொழிபெயர்த்தான்வாழி
நோன்பிருந்து தமிழன்னை பெற்றமகன் வாழி

பதஞ்சலிசூத் திரத்திற்கோர் உரைகண்டான் வாழி
பாரதிசக்தி கவிகேட்கப் பாடியவன் வாழி
சுதந்திரத்தின் மேல்தாகம் சூழ்ந்தகவி வாழி
துடிப்புள்ள சந்திரிகை கதை சொன்னான் வாழி

சிதைந்திட்ட கொடுநெஞ்சும் சிரிக்கின்ற வண்ணம்
சின்னச்சங் கரன்கதையை செப்பியவன் வாழி
விதந்தருநற் கற்பனையாம் புரவியினைப் பூட்டி
விந்தையென ஞானரதம் ஓட்டியவன் வாழி

முன்னவர்போல் கவிச்செங்கோல் ஏந்தியவன் வாழி
வசனகவி வளமாக வார்த்தகவி வாழி
அன்னிபெஸன்ட் அம்மையின்மேல் ஆங்காரம் கொண்டே
ஆங்கிலத்தில் 'நரிக்கதையை' ஆக்கியவன் வாழி
கன்னலெனத் தமிழ்மொழியைக் காட்டியவன் வாழி
கனல்பாடல் ஆங்கிலத்தில் கண்டகவி வாழி
மின்னலிடும் கண்ணொளியில் விரிகின்ற யாவும்
விந்தைமிகு கவிதையென விளக்கியவன் வாழி

வானத்தை மண்ணுக்கு வரவாக்க வேண்டி
வானத்தை அழைக்கின்ற வளர்மீசை வாழி
ஞானத்துக் களஞ்சியமாம் சிரசதனைக் காக்கும்
நற்றலைப் பாகை வாழி; கருங்கோட்டு வாழி
கானத்தைப் பொழிகின்ற திரு நா, வாய் வாழி
கடலாழம் துழவுகிற கண்ணிரண்டும் வாழி
ஈனத்திற் கெதிராக எழுநெஞ்சம் வாழி
எந்நாளும் நிமிர்கின்ற எம்கவிஞன் வாழி

கந்தனையும் வள்ளியையும் காற்றூஞ்சல் தன்னில்
காதலிக்க வைத்திட்ட கவிமன்னன் வாழி
சிந்தனையைத் தெளிவாக்கப் பாடியவன் வாழி
தெளிவாகத் 'தராசு' அதனைத் தேர்ந்தகவி வாழி
வந்தனையைத் தொழிலுக்கும் உழவுக்கும் தந்து
வரலாறு படைத்திட்ட மகாகவிஞன் வாழி
பிந்திவரும் காலமெல்லாம் பெயர்கூறிப் போற்றி
பிறந்திட்ட பாரதியார் வாழியவே வாழி!

★



இந்நூலின் ஆசிரியர் கவிமாமணி இலந்தை சு. இராமசாமி அவர்கள் நெல்லை மாவட்டத்தில் உள்ள தெற்கு இலந்தைக் குளம் கிராமத்தில் 20-4-1942ல் பிறந்தவர். தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரியில் பயின்று பட்டம் பெற்றவர். பேராசிரியர் அ. சீனிவாச ராகவன் அவர்களின் மாணவர். இவர் பெற்றுள்ள பட்டம் :- BSC. Grad . I.E.T.E கடந்த இருபது ஆண்டுகளாகக் கவிதை எழுதி வருகிறார் பல கவியரங்கங்களில் கலந்து கொண்டுள்ளார். சென்னை, பாரதி கலைக் கழகம் சமீபத்தில் இவருக்குக் 'கவிமாமணி' என்ற பட்டம் அளித்து கௌரவித்தது.

வானொலியில் இவரது 'மெல்லிசை' பாடகள் ஓலி பரப்பப் படுகின்றன. பல அறிவியல் ஒலிபரப்புக்களும் செய்துள்ளார். பாரதியிடம் அளவு கடந்த ஈடுபாடு சூரத், பம்பாய் போன்ற வடநாட்டு நகர்களில் பாரதியைப்பற்றிப் பேசி பெருமை சேர்த்திருக்கிறார்.

தற்சமயம் சென்னைத் தொலைபேசியில் மக்கள் தொடர்பு அதிகாரியாகப் பணியாற்றி வருகிறார்.

